Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM.

# ஸ்ரீராமாநுஜன் 225

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

10—[illegible]—1967ல் வெளியிடப்பட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன் 225







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 19 | பிலவங்கஹு புரட்டாசி மாதத்திற்காக 10—9—67 ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 10

## திருவாய்மொழி நூற்றந்தாதி 100.

முனிமாறன் முன்புரைசெய் முற்றின்பம் நீங்கி*
தனியாகிநின்று தளர்ந்து—*நனியாம்
பரமபத்தியால் நைந்து பங்கயத்தாள் கோனை*
ஒருமையுற்றுச் சேர்ந்தா னுயர்ந்து.

| | |
|---|---|
| முனி மாறன் | சடகோப மாமுனிவர் |
| முன்பு உரை செய் | கீழே அருளிச் செய்த |
| முற்றின்பம் நீங்கி | இன்பம் முழுவதும் நீங்கினவராகி |
| தனி ஆகி நின்று தளர்ந்து | தனிமையாய் நின்று வருந்தி |
| நனி ஆம் பரம பத்தியால் நைந்து | அதிகமாக விளைந்த பரம பக்தியினால் பரிபக்வராய் |
| பங்கயத்தாள் கோனை | திருமாலை |
| ஒருமை உற்று உயர்ந்து சேர்ந்தான் | திருவுள்ளத்தாலே ஒருமைப் பட்டு அத்தாலே நித்ய ஸூரிகளின் உயர்வை யுடையராகி எம்பெருமானோடே சேர்ந்தாராயிற்று. |

* * *—சூழ்விசும்பணி முகிலென்கிற கீழ்த்திருவாய் மொழியிலே பரம பதத்திலேபுக்குப் பரிபூர்ணாநந்த சாலியாய் நித்யஸூரிகள் திரளிலே யிருக்கிறபடியாகத் தம்மை யநுஸந்தித்தவிது ஜ்ஞாநாநுஸந்தானமாத்திரமாய் உள்ளபடியே யன்றிக்கே யொழிகையாலே, மேருமலையுச்சியில் இன்பம் தலைச்சிறப்ப விருந்தவன் பேராழமான பாதாளத்திலே தலைகீழாகத் தள்ளுண்டு விழுந்து நோவுபடுமா போலே இப்பிறவிப் பெருங்குழியிலேயே தனியே தாமிருக்கிறபடியைக் கண்டு ஆற்றாமை தலையெடுத்துப் பெருமிடறு செய்து கூப்பிட்டுப் பெரிய ஆர்த்தியோடே திருவடிகளிலே சரணம்புக, பெரிய திருவடி திருத்தோளிலே பெரிய பிராட்டியா

ரோடேகூட இவரபேக்ஷித்தபடியே எம்பெருமான் வந்து தோன்றி, காற் கட்டான ப்ரக்ருதி ஸம்பந்தத்தையு மறுத்துத் திருநாட்டிலே கொண்டுபோய் நித்யஸூரிகளோடே ஒரு கோவையாக்கி நித்ய கைங்கரியம் கொண்டருள, இங்ஙனம் தாம் * அவாவற்றுவீடுபெற்ற படியை *முனியே நான்முகனேயென்கிற திருவாய்மொழியில் அருளிச்செய்து தலைக்கட்டினராழ்வார்—என்றதாயிற்று.

(விசேஷ விவரணம்) கீழே அர்ச்சிராதிமார்க்க கதியைப் பரக்கப் பேசி அந்த மில் பேரின்பத்து அடியரோடிருந்தமை* என்றார். திருக்கண்களைத் திறந்து பார்த்தவாறே திருப் புளியாழ்வாரடியிலேயே தாம் வீற்றிருக்கக் கண்டார். நித்ய முக்தர்களின் திரளிலேயிருந்ததாகச் சொன்ன இருப்பு ஜ்ஞாநாநுஸந்தான மாத் திரமாயிருந்தது. ப்ரக்ருதியிலேயே தாம் சிக்குண்டிருக்கிறபடியைக்கண்டு போர நொந்தார். தம்முடையஆகிஞ்சந்யத்தையும்அநந்யகதித்வத்தையும் நன்குணர்ந்த எம்பெருமான் இன்னமும் தம்மை இப்படி நோவுபட விட்டிருப்பது என்னே! என்று மிகவும் கிலேசித்து, மாதா பிதாக்கள் அருகேயிருக்க, பசியாலும் தாஹத்தாலும் நோவு படுகிற ஸ்தநந்தயப்ரஜை ஆர்த்தியின் மிகுதியாலே தாய்பேரைச் சொல்லிக் கூப்பிடு மாபோலே. ஈர நெஞ்சு இல்லாதாருடைய ஹ்ருதயங்களுங்கூட இரங்கும் படியாகவும், அவனுக்குத் தம்மை அணைத்தல்லது பரமபதத்திலும் இருப்பு அரிதாம் படியாகவும் காட்டுத் தீயிலே அகப்பட்டாரைப் போலே ஆர்த்தத்வநியோடே பெருமிடறு செய்து கூப்பிட்டு, அவனும் வந்து தோற்றி இவருடைய ப்ரக்ருதி ஸம்பந்தத்தை யறுத்து அடியார் தம் திரளிலே கொண்டு சேர்க்க, தாம் க்ருத க்ருத்யராய் அவாவற்று வீடு பெற்றபடியைப் பேசித்தலைக்கட்டினரென்றதாயிற்று. (100)

திருவாய்மொழி நூற்றந்தாதி முற்றிற்று.

## திருவாய்மொழி நூற்றந்தாதியின் பெருமை.



தேவப்பெருமாள் ஸன்னிதி மணவாளமாமுனிகளின் திருமஞ்சன அவஸரம்.

உலகில் தோன்றியுள்ள அந்தாதி வெண்பா நூல்களில் நிகரற்ற நூல் இஃதொன்றேயாம். ஆசிரியர்களருளிச் செய்த எந்நூலை எடுத்துக் கொண்டாலும் 'இது நிகரற்றது' இஃது ஒப்பற்றது' என்றே சொல்லும்படியா யிருக்கும். அப்படிச் சொல்லுவதன்று இது. இதன் சிறப்பை யாவருமறியும் படி நன்கு நிரூபிக்கிறேன். திருவாய்மொழி யாயிரமும் அந்தாதியே. இயற்பாவில் எட்டு திவ்வியப் பிரபந்தங்கள் அந்தாதியே. கண்ணிநுண் சிறுத்தாம்பு அந்தாதியே. பெரியாழ்

வாரும் திருமங்கையாழ்வாரும் தம்தம் திருமொழிகளில் ஒரு பதிகம் அந்தாதியாகப் பாடியுள்ளார்கள். கிம் பஹுநா ? உலகில் பல்லாயிரம் அந்தாதிப் பிரபந்தங்கள் தோன்றியுள்ளன, அவையெல்லாவற்றினுடையவும் ப்ரக்ரியை எப்படிப்பட்டதென்றால், செய்யுளைத் தொடங்கவேண்டியது நூலாசிரியர்களின் தம்தம் இஷ்டத்தைப் பொறுத்தது. செய்யுளை முடிக்கவேண்டியதும் தங்கள் தங்கள் இஷ்டத்தைப் பொறுத்தது. தங்களிஷ்டப்படி முடித்த சீரையோ சொல்லையோ எழுத்தையோ தொட்டுக்கொண்டு மேற்பாட்டு ஆரம்பம் செய்வதென்பதொன்றே அந்தாதி பாடுகிறவர்களனைவருங்கொண்ட நியதியாகும். (உதாரணம்.) பொய்கையாழ்வார் *வையம் தகளியா* என்று தொடங்கினர். (வையம்) என்று ஆரம்பம் செய்தது அவரிஷ்டமே. கடையடியை "இடராழி நீங்குகவே யென்று" என்று முடித்தார் இதுவும் அவரிஷ்டமே. "இடராழி நீங்குகவேயிங்கு" என்றாலும் கேள்வியில்லை. அந்தாதி பாடுவார் வெண்பாவிலோ கட்டளைக் கலித்துறையிலோ முடிக்குஞ்சொல்லை அவரவர்கள் இஷ்டப்படி பாடலாம்; அப்படித்தான் பாடியிருக்கிறார்கள் என்பது நிர்விவாதம்.

இனி மணவாளமாமுனிகளின் திருவாய்மொழி நூற்றந்தாதியின் அமைப்பைப்பற்றிக் கேண்மின். நம்மாழ்வார் "உயர்வற" என்று திருவாய்மொழி தொடங்கினபடியால் அதற்குக் கட்டுப்பட்டு "உயர்வே பரன்படியை" என்று தம்முடைய அந்தாதியைத் தொடங்கினர். (திருவாய்மொழியில்) அடுத்த பதிகம் (வீடுமின் முற்றவும்) என்று தொடங்குவதால் (மாமுனிகள் தம்முடைய அந்தாதி) அத்தோடும் சேரும்படி "வேராகவே விளையும் வீடு' என்று (வீடு) என்பதையே கடைச்சீராகவைத்துப் பாசுரத்தை முடித்தார். அதற்கு மேற்பாட்டைத் தம் இஷ்டப்படி தொடங்காமல் தமது நூலுக்கும் அந்தாதி யடைவு குலையாதபடிக்கு (வீடுசெய்து) என்றே தொடங்கினர். நூறு பாட்டும் இந்த நிப்பந்தனைக்குக் கட்டுப்பட்டே அவதரித்துள்ளன. செய்யுளுக்குரிய மோனையின்பமும் எதுகையின்பமுங்கூட தம்மிஷ்டத்தைப் பொறுத்ததல்ல வென்பதை உற்றுநோக்கவேணும். (வீடு என்றதற்கு மோனை சேரும்படி (வேராகவே) என்ன வேண்டிற்று. (வேராக) என்றதற்கு எதுகை சேரும்படி முன்னடியில் (வாராமல்) என்னவேண்டிற்று. இவ்வளவோடுங்கூட ஒவ்வொரு பதிகத்தின் ஸாரத்தையும் ஒவ்வொரு வெண்பாவில் அடக்கவேண்டிற்று. பாட்டுத்தோறும் நம்மாழ்வார் திருநாமமும் தவறாது வரவேண்டியதாயிற்று இத்தனை நிர்பந்தங்களைக்கொண்டு பாடின அந்தாதி நூல் இஃதொன்று தவிர மாநிலத்தில் வேறொன்று கிடையாது. உண்டெனில் காட்டலாம். "மாமுனிகள் திருவாய்மொழிக்கு இங்ஙனே நூற்றந்தாதி அமைத்தார்; நாம் பெரிய திருமொழிக்கு இங்ஙனே ஒரு பிரபந்தமிடுவோம்" என்று சங்கற்பித்து ஒரு மகாகவி முயன்றால் அப்போதுதான் இதன் அருமைபெருமை தெரியும்.

---

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

ஸ்ரீராமானுஜன் தொடங்கினபோது ஸஞ்சிகைதோறும் இராமாநுச நூற்றந்தாதியில் ஒவ்வொரு பாசுரம் உரையோடு வெளியிடப்பட்டுவந்து அது முடிந்தபின் திருவாய்மொழி நூற்றந்தாதி தொடங்கி அஃது இப்போது தலைக்கட்டப்பட்டது.

இப்போது வெளிவரும் பத்திரிகை 225லக்கம் கொண்டதாதலால் மேலே விவரித்த படி 225 பாசுரங்கள் வெளிவந்திருக்கவேண்டும். ஆனால் 208 பாசுரங்கள் மட்டுமே வெளிவந்துள்ளன. இக்குறைக்குக் காரணம் பதினேழு பத்திரிகைகள் இரண்டிரண்டாகச் சேர்ந்து வெளிவந்ததேயாம்.

இனி அடுத்த ஸஞ்சிகையிலிருந்து நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் ஒவ்வொரு பாசுரங்கொண்டு அவ்வப் பாசுரங்களில்வரும் திருப்பதியின் வரலாற்றைச் சிறிது விளக்கமாக வெழுதி அநுபவிக்க அபிலாஷையுள்ளது.

தபால் இலாக்காவில் இத்தகைய பத்ரிகைகளின் வெளியீட்டுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த ஸௌகரியம் 14—8—67 தேதியிலிருந்து சிக்கனமாக்கப்பட்டுள்ளது. இரண்டு பைஸா ஸ்டாம்புக்கு உரிய எடைக்கு மேற்பட்டால் மூன்று பைஸா ஸ்டாம்பு ஒட்டுவதென்று நிபந்தனை இருந்தது. இப்போது அது ஐந்து பைஸா ஸ்டாம்பாக ஏறிவிட்டது. அதற்குரிய எடைக்கும் மேற்பட்டால் 10 பைஸா. இவ்வண்ணமாக ரேட் உயர்த்தப்பட்டிருக்கிறது. இதற்குச்சேர ஸ்ரீராமாநுஜனில் பக்கங்களைக் குறைக்கவேண்டியதாகும். அதற்குமனமில்லை. சந்தாத் தொகையை உயர்த்தவும் மனமில்லை. ஸ்டாம்பு செலவுக்காகமட்டும் ஒரு ரூபா உயர்த்தப் படுகிறது. ஆகவே அவரவர்கள் இனிச் செலுத்த வேண்டிய சந்தா ரூ. 6 மட்டும். என்பது கவனிக்கத்தக்கது.

சந்தா பாக்கி செலுத்தவேண்டியவர்கள் நூற்றுக்கணக்கில் தேறுகிறார்கள். ஒவ்வொரு மாத ஸஞ்சிகையும் நாம் முன் மாதத்திலேயே ஸித்தப்படுத்தி யனுப்பி வருகிறோமென்பதை அவர்கள் கவனிக்கவேண்டும். இந்த வருடச் சந்தாவோடு கூட அடுத்த வருடச் சந்தாவையும் நவம்பர் மாத முடிவுக்குள் அனுப்பாதவர்களுக்கு பத்ரிகை நிறுத்தப்படுமென்று முடிவாக்த் தெரிவிக்கப்படுகிறது. (காரியதர்சி)

## அன்பார்ந்த பெரியார்களின் அருமையான கடிதங்கள்.

1. ஸ்ரீமதுபயவே. (ராவ்ஸாஹிப்) S. ராகவையங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம். ..............விண்ணப்பம். அடியேன் ஆவலோடு எதிர்பார்த்திருப்பது ஸ்ரீராமாநுஜனையே. அது கிடைத்துவிட்டால் ஒருவாரம் வரையில் அதன் அநுபவமே போது போக்காகவும் உணவாகவும் இருக்கும். 224 நெ. எத்தனை தடவை வாசித்தாலும் ஆராவமுதமாகத்தானுள்ளது. பூர்த்தியாகப் பலதடவை வாசித்தேன். உகப்பும் சிரிப்பும் அபரிமிதம். ஸ்ரீமந்நிகமாந்த மஹா குருவின் உண்மையான சரித்திரத்தையும் அவருடைய ஸ்ரீஸூக்திகளின் தந்வார்த்தங்களையும் யாவரும் அபிநந்திக்கும்படியாக தேவரீர் பல பாஷைகளில் பல க்ரந்தங்களில் மிகத் தெளிவாக விவரித்திருந்தும் அவற்றை நவீனர்களும் நன்றாகப் பார்த்திருந்தும் ஒருவர்மாறி ஒருவராகக் குத்ஸிதங்களும் குறும்புகளும் செய்துகொண்டே அடிக்கடி தேவரீருக்கு சிரமம் கொடுக்கிறார்களே, இது எதற்காகவென்று புரியவில்லை: ஆலோசித்துப் பார்த்ததில், தேவரீர் மூலமாக மேன்மேலும் அபூர்வார்த்தங்கள் அவதரித்துக்கொண்டேயிருக்க வேணுமென்பதுதான் எம்பெருமானுடைய திருவுள்ளம் என்று தெளியவேண்டியதாகிறது. தேவரீர் எழுதும் ஒவ்வொரு

விஷயமும் நிர்த்தாரணமாகவே ஆசந்த்ரார்க்கம் விளங்கக்கூடியதாகவுள்ளது என்பதை ஒப்புக்கொள்ளாதவர் ஒருவர்கூட இருப்பதாகத் தெரியவில்லை. எந்த விஷயத்திலும் எவ்வித குறையும் சொல்லமுடியாமலன்றே ஆணித்தரமான நிரூபணங்களை பண்டிதர் பாமரர் என்கிற வாசியில்லாமல் அனைவரும் அநுபவித்து ஆனந்தித்து வருகிறார்கள். தேவரீருடைய புத்தகங்களும் பத்ரிகைகளும் நான்கு பாஷைகளிலும் வெளிவந்து கொண்டிருப்பதால் பாரத நாட்டில் இவை நடையாடாதவிடம் இருப்பதாகத் தெரியவில்லை. இப்படியிருந்தும் சில மூர்க்கர்கள் மனச்சாட்சிக்கு விரோதமாக எதையாவது பேசியும் எழுதியும் போவதனால் சில பாமரர்கள் கூட வஞ்சிக்கப்படமாட்டார்களென்பதை அவரவர்கள் தெரிந்து கொள்ளாமலா இருக்கிறார்கள்? பரமஸாத்விகாக்ரேஸரரான ஸ்ரீமத்பரமஹம்ஸ. ஸ்ரீமதாண்டவன் போல்வார் வீணான விஷமங்கள் வளராதபடி திருத்திப் பணி கொள்ள வேணுமென்று என்னெஞ்சினூடே ப்ரார்த்தித்து நிற்கிறேன்

S. Raghavaiengar, Madras-24. 16—8—67.

2 ஸ்ரீமதுபயவே. S. நாராயணையங்கார் ஸ்வாமி, B.A., B.L., அட்வகேட் (ரிடைர்ட் தாசில்தார்) ராஜாஜி நகர், பல்லாவரம். இந்த ஸ்வாமி எழுதுவதாவது, "ஸ்ரீராமானுஜன் 224 கிடைத்தது பூர்த்தியாக வாசித்தேன். ஒரு விஷயத்திற்காவது விடையளிக்கவல்ல வித்வான் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. நான் ஒருவக்கீலாகையாலே வக்கீல்களின் முறையை அவலம்பித்து ஒருவிண்ணப்பம் செய்கிறேன்; அதாவது, ஸ்வாமியினுடைய எந்தவினாவுக்கும் எந்தவித்வானும் விடையளிக்க முடியாதென்பதை ஸித்தாந்தமாக வைத்துக்கொண்டு ஸ்வாமியே எதிர்க்கக்ஷியை அவலம்பித்து விடைகளையும் வெளியிட்டால் என்போல்வார் த்ருப்தியடைய ஹேதுவாயிருக்கும். (இவ்விதமாக வக்கீல்ஸ்வாமி தெரிவித்திருக்கிறார். அடியேனுக்குப் பரம ஆப்தரான இந்த ஸ்வாமியை த்ருப்தி படுத்தவேணுமென்று அடியேனுக்கு விருப்பமிருந்தும் முடியாமைக்கு வருந்தி நிற்கிறேன். P. B. A.)

---

## ஸ்ரீமதுபயவே. வித்வான். மதுராந்தகம் ஈச்சர்பாடி: வீரராகவாசார்யஸ்வாமி.

திருவையாறு காலேஜில் உபாத்யாயராக விளங்கின காலத்திலிருந்தே நமக்கு அத்யந்த பரிசிதரும், நம்மிடத்தில் அவ்யாஜப்ரீதி கொண்டவருமான ஸ்ரீ மதுராந்தக ஸ்வாமி காலேஜில் விச்ராந்தி பெற்றது முதலாகத் திருவரங்கம் பெரிய கோயிலை உறைவிடமாகக் கொண்டு வாழ்ந்து வருகிறார். இவரோடு அடிக்கடி ஸந்திக்க நேரும். இந்த ஸ்வாமிபக்கலில் நாம் க்ரஹித்திருப்பது சிறந்த பண்டிதரென்பதுமட்டுமல்ல; தற்காலத்து வித்வான்களை யபேக்ஷித்து இவர்கூடிய மட்டில் ப்ராமாணிகரென்றும் பாபபீருவென்றும் பூருவாசாரியர்களிடத்தில் துல்யமான ப்ரதிபத்தி யுடையவரென்றும் உள்ளபடி க்ரஹித்திருப்பதுண்டு. ஆளவந்தார் ஆகமப்ராமாண்யத்தில் *அபிநிவேச வசீக்ருதசேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:* என்றும் கூரத்தாழ்வான் வரதராஜ ஸ்தவத்தில் *விவேகதியம் ஏகதோ ஹி அபிநிவேசலேசோ ஹரேத் மஹத்து அபிநிவேசநம் கிமுத* என்றும் அருளிச்செய்திருப்பவை ப்ரஸித்தம். இதை அவரவர்கள் பரஸ்பரம் சொல்லிக்

1

கொள்ளலாமாகையாலே இதை யெடுத்துரைக்க நாம் விரும்பவில்லை, சர்ச்சிக்கும் விஷயங்களில் ப்ரமமுள்ளதா? ப்ரமையுள்ளதா? என்பதை தடஸ்தர்களான ப்ராஜ்ஞர்களே நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். அவரவர்கள் தாங்கள் பேசுவதையும் எழுதுவதையும் ப்ராமாணிக மென்றே நினைத்துக்கொள்வது இயல்வு. ப்ரக்ருதம் மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியைப்பற்றி ப்ரஸக்தமான சில விஷயங்களை உலகமறிய விஜ்ஞாபிக்கிறேன்.

ஸ்ரீராமாநுஜன் 224ல் கலி புருஷ கோலாஹல வ்யாஸ விமர்சனம் வாசித்திருக்கிறீர்கள். ஈ. தே. ஸ்ரீநிவாஸன் என்பவருடைய துராக்ரஹ பரீவாஹமான கட்டுரையை நாம் கண்டித்திருப்பது தவிர ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ராதிபரும் தமது ஆடி மாதப் பத்ரிகையில் ஸம்க்ஷேபமாகவும் ஸாரமாகவும் கண்டித்திருந்தார். மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமி அதற்குத் தாமொரு மறுப்பு எழுதி ஸுதர்சன பத்ரிகையிலேயே அதை ப்ரசுரிக்கும்படி ஆசிரியர்க்கு அனுப்பியிருந்தாராம். அதை அவ்வாசிரியர் வாசிகமாகவே கண்டித்து முடித்துக் கட்டுரையைத் திருப்பிக் கொடுத்துவிட்டாரென்று கேள்விப்பட்ட நாம் ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமிக்குத் தெரிவித்திருந்ததாவது, "இந்த விஷய சர்ச்சையில் ப்ரவேசித்து ஏதாவது எழுத வேணுமென்கிற விருப்பம் தேவரீருக்கு இருப்பதாகத் தெரியவருவதால் அடியேனுடைய சில ஸந்தேஹங்களைப் பரிஹரித்தருளுமாறு ப்ரார்த்திக்கிறேன்; இத்துடன் இரண்டு ஸந்தேஹங்களைமட்டும் விஜ்ஞாபித்திருக்கிறேன்; பரிஹாரம் பெற்று க்ரமேண மற்ற ஸந்தேஹங்களையும் விஜ்ஞாபிப்பேன்." என்பதாக. தெரிவித்த இரண்டு ஸந்தேஹங்களாவன— [முதல் ஸந்தேஹம் *பால்யேந திஷ்டாஸேத்* என்பது பற்றி.] ஸ்ரீமதாண்டவன் ஷஷ்டியப்த பூர்த்தி மலரில் இந்த மதுராந்தகம் ஸ்வாமி ஆசார்ய மஹிமவியாஸமொன்றெழுதி அதில் தேவ சப்தத்திற்குள்ள பத்துவிதமான பொருள்களும் ஆசார்யன் பக்கலிலும் பொருந்துமென்று நிரூபிக்க ஆரம்பித்து முதற்பொருளான க்ரீடையை ஆசார்யனிடத்தில் பொருந்தவைக்கப் புகுந்து 'பால்யேந திஷ்டாஸேத் என்கிற பாலத் தன்மையுடையவன் ஆசார்யன் என்றெழுதியுள்ளார். இது சாரீரகமீமாம்ஸையில் *அநாவிஷ்காராதிகரண நிஷ்கர்ஷத்தைத் தெரிந்து கொள்ளாமையினாலாயது என்பதை ஸ்ரீராமாநுஜன் 222ல் (பக்கம் 18, 19ல் விவரித்திருக்கிறேன். அங்கு முடிவில் எழுதியிருப்பது "ஆசார்யனுடைய க்ரீடையை விவரிக்கும் மதுராந்தக வித்வான் *பால்யேந திஷ்டாஸேத்* என்கிற ச்ருதியை யுதாஹரிப்பதற்கு என்ன ப்ரஸக்தி? அந்த ச்ருதியிலுள்ள பால்ய சப்தத்திலிருந்து 'பாலஸ் தாவத் க்ரீடா ஸக்த:' என்கிற வசனத்தை நினைத்துக்கொண்டாரென்பதில் ஸந்தேஹமுண்டோ? ப்ரக்ருதத்தில் இவர்க்கு நிரூபணீயம் க்ரீடையே யொழிய பால்யமன்றே; இவ்வளவு உலுக்குவதை ஸஹிக்கமாட்டாதவரென்று விரமாமி" என்று ......இதைப்பற்றி ஸந்தேஹ பரிஹாரம் செய்யவேணுமென்று முதல் விஷயமாக விஜ்ஞாபித்திருந்தேன். இதற்குக் கிடைத்த பதிலாவது, "கி. வாஸுதேவாசாரியிடம் பதில் அப்பொழுதே எழுதிக் கொடுத்துள்ளேன்" என்பதாம். அது எனக்குக் கிடைக்கவில்லையென்றும் எனக்கே நேராக எழுத வேண்டியதென்றும் தெரிவித்திருக்கிறேன். பதில்வரலாம்

இரண்டாவதாக விஜ்ஞாபித்த ஸந்தேஹமாவது, ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:........என்கிற தசையாம்" என்றுள்ள விடத்தில் மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகமாகத் தோற்றியிருப்பதாகச் சொல்லப்படுகிற அர்த்தங்கள் எவை? பிறர் பற்றினது விடாமல் பிடிவாதமாகச் சொல்லும் அர்த்தம் எது? என்பதாக. இதற்குக் கிடைத்திருக்கிற பதிலாவது, "மத்யஸ்த த்ருஷ்டியாலே தோற்றின ப்ராமாணிகார்த்தமாவது பிராட்டியின் ஈச்வரத்வம் விபுத்வம் உபாயத்வம் முதலியன; பற்றினது விடாதே பிறர் சொல்லுமர்த்தம்-பிராட்டிக்கு சக்தி விசேஷத்தாலே அணுத்வமும் விபுத்வமுமுண்டு; ஆனால் ஈச்வரத்வமும் ஸாக்ஷாதுபாயத்வமும் இல்லை இத்யாதி."

இந்த பதில் 27—8—67ல் எமக்குக் கிடைத்தது. உடனே அந்த ஸ்வாமிக்கு நாம் பதில் எழுதியதாவது, ஸ்ரீமத்ரஹஸ்ய த்ரயஸாரத்தில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க இத்யாதிகள் எழுதப்பட்டுள்ள ப்ரகரணத்திற்குச் சேராதபடி தேவரீர் தெரிவித்திருப்பதில் அடியேனுக்கு த்ருப்தி பிறக்கவில்லை; அங்கு ஸ்வாமி தேசிகன் பலபல ப்ரமாணங்களை யுதாஹரித்தருளியிருக்கிறார்; அவற்றுக்குச் சேராதபடி தேவரீர் எழுதியிருப்பதில் அடியேன் மனம் தெளிவு பெறவில்லை; மேலும் இத்தகைய சாஸ்த்ரீய விஷயங்களை ஸம்ஸ்க்ருத பாஷையில் சர்ச்சிப்பதுதான் யுக்தம்; இதோ அடியேன் ஸம்ஸ்க்ருதத்திலேயே எழுதியனுப்புகிறேன்; தேவரீரும் பரம க்ருபையுடன் ஸம்ஸ்க்ருதத்திலேயே எழுதியனுப்புமாறு ப்ரார்த்திக்கிறேன்—என்று.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்திலே ஸித்தோபாய சோதநாதிகாரமென்றும் ஸாத்யோபாய சோதநாதிகாரமென்றும் இரண்டதிகாரங்கள். இவற்றில்—"இப்படி அந்த கலக்கத்தை சமிப்பித்தோம்; இனி இந்த வியாமோஹம் சமிப்பிக்கிறோம்" என்று அஸக்ருத் அஸ்தாநே எழுதப்பட்டுவருகிறது. இந்த கலக்கங்களும் வியாமோஹங்களும் தமக்கோ பிறர்க்கோ தெரியவில்லை. ப்ரபத்தியின் உபாயத்வ சோதநம், பிராட்டியின் உபாயத்வ சோதனம் என்னுமிரண்டு விஷயங்கள் தலையாக நிற்கின்றன. ப்ரபத்தி உபாயமென்று சிலர்க்கு உண்டான கலக்கத்தை *காம்பறத் தலைசிரைத்து* என்ற கணக்கிலே வேரறக் களைந்தவர் ஸ்வாமி தேசிகன். *உபாயஸ் ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவாந்........நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே* இத்யாதிஸூக்திகள் கிடக்கட்டும்; *உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாமபீ:* என்ற (ஆளவந்தாருடைய) கீதார்த்தஸங்க்ரஹஸூக்தியின் ரக்ஷையிலே—"ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பல ஸாதநத்வ அநுபபத்தித்தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே' மோக்ஷோபாயத்வ புத்திரபிஸ்யாத்இதி பாவ:; அந்தத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாய:" என்று கல்வெட்டு செய்துவிட்டு, ஸாரத்தில் ஒரு மூலையில் "ப்ரபத்தியுங் கூட உபாயமன்றென்று சிலர் அதிவாதம் பண்ணினார்கள்" என்று தொடங்கி ஏதோ எழுதி வைத்திருக்கக் காண்கிறோம். இவற்றை அலசியலசி ஆராயத் தொடங்கினால கலக்கமும் வியாமோஹமும் யாருக்

கென்று தெளியலாகும். இனி பிராட்டியின் உபாயத்வ சோதனத்தில் இறங்கினாலோ அந்த தலைவேதனைகளைக் கேட்கவே வேண்டியதில்லை "மந்த்ரார்த்தம் காலக்ஷேபம் சாச்சாகிறது" என்பவர்கள் என்ன சாய்க்கக் கேட்கிறார்களோ தெரியவில்லை "ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்" என்று தமிழிலருளிச்செய்து அதை ஸம்ஸ்க்ருதத்திலும் "மோக்ஷப்ரதே பகவதி கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றும் *அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:' நிக்ரஹாத் வாரணம்காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே* என்றுமருளிச் செய்துவைத்து, வேறு விஷயத்திலன்றிக்கே அதே விஷயத்தில் "த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:......" இத்யாதிகளை யெழுதிவைத்திருக்கிறாரே! இதற்கென்ன சொல்லுகிறீரென்று கேட்டிருக்கிறேன். இந்த ப்ரகரணத்தில் கீழே "வேரி மாறாத பூமேலிருப்பாள்—நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு—உன்திரு—திருவுக்குந் திரு—தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" இத்யாதிகளான ஆழ்வார் பாசுரங்களும் *ச்ரேயோ நஹ்யரவிந்த .... சேஷசேஷாசநாதி.......ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாத் ....ஐச்வர்யமக்ஷரகதிம்* இத்யாதி ஆசார்ய ஸூக்திகளும், *லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேச: .. *ப்ரபத்யேத் நியத: ச்ரியம்......அலமேஷா பரித்ராதும்......ஆத்மவித்யா ச தேவி! த்வம் .. இத்யாதிகளான பாஞ்சராத்ர புராணேதிஹாஸ ச்லோகங்களும் அடுக்கப்பட்டிருக்கின்றன. "இவள் புருஷகாரமாய்க்கொண்டு தஞ்சமாகிறாள்" இத்யாதிகளைத் தாமே யருளிச்செய்தபோது இந்தப் பிரமாணங்களெல்லாம் எங்கே புக்கொளித்தனவோ? "வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே" *ப்ரபத்யேத் நியத: ச்ரியம்* என்றவற்றால் என்ன லாபம் கிடைத்துவிட்டதோ? எம்பெருமானாருடைய சரணாகதிகத்யத்தில் முந்துற முன்னம் "அசரண்ய சரண்யாம் அநந்யசரணச் சரணமஹம் ப்ரபத்யே" என்று அநுஷ்டானவாக்யமேயிருக்க இதை விட்டு விதிவாக்யத்தைப் பிடித்துக்கொண்டதென்னே? என்று இந்தக் கேள்விகளை யெல்லாம் ஸம்ஸ்க்ருதத்திலேயே யெழுதியனுப்பி ஸம்ஸ்க்ருதத்திலேயே பதிலெழுதியனுப்பப் பிரார்த்தித்திருக்கிறேன்.

இதற்குக் கிடைக்கும் பதிலை அடுத்த ஸ்ரீராமாநுஜனில் வெளியிடுவோம் நாம் விரும்பியிருக்கிறபடி. ஸம்ஸ்க்ருதத்திலேயே சர்ச்சை நடந்து ஒரு முடிவு விளைந்தால் அதை நம்முடைய வைதிகமநோஹராவில் வெளியிடக் காணலாம்.

ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியின் ஸ்ரீமுகத்தில்—'லேக ப்ரதிலேகங்களாலும் முத்ரண ப்ரசுரங்களாலும் முடிவுகாண வியலாது; இங்குள்ள ஸ்ரீ உ. வே. சௌரி அபிஷேகம் ஸ்வாமிகள் முதலியவர்மாத்யஸ்த்யத்தில் சர்ச்சை செய்து தெளியலாமென்று ஸ்ரீஸுதர்சநபத்ராதிபருக்கெழுதினேன். அதை அவர் மறுத்து விட்டார்; தேவரீராவது மறுக்காமல் வாதத்திற்கு முன்வரக் கூடுமா?' என்றும், முடிவில் "நேரில்வாதிக்க ஸஜ்ஜோஸ்மி" என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது. தகுந்த வ்யவஸ்தையுடன் அதையும் நடத்துவோமென்று தெரிவித்திருக்கிறோம். *

———

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வடநாட்டுத் திருப்பதி யாத்திரைச் செய்திகள்.

சென்னை அட்வகேட் ஸ்ரீமதுபய வே. பிள்ளைபாக்கம் பஹுகுடும்பி அனந்தாசாரியர் ஸ்வாமியென்னும் பெரியார் ஸமீபகாலத்தில் ஏறக்குறைய மூன்றுமாத காலம் பல ஆப்தர்களுடன் வடநாட்டுத் திருப்பதி யாத்திரை செய்துவந்தார். அடியேன் ஹரித்வார ஹ்ருஷீகேசபர்யந்தமாக இருபத்து மூன்று தடவையும், ஸ்ரீபதரிகாச்ரமபர்யந்தமாக முன்று தடவையும் ஸபரிவாரனாக யாத்திரைசெய்து வந்தவனாதலால் அந்தந்த ஸ்தல விசேஷங்களின் அருமை பெருமைகளை ஆழ்ந்து அநுபவித்து, வடமொழி தென்மொழி தெலுங்கு ஹிந்தியாகிய நான்கு பாஷைகளிலும் ஸ்வாநுபவங்களை விரிவாக எழுதி அச்சிட்டு வெளியிட்டிருப்பது உலகம் பரவியுள்ளது. 1958-ஆம் வருஷத்திற்குப் பிறகு இந்த யாத்ராபாக்யம் அடியேனுக்கு அரிதாய்விட்டது. ஆனாலும், வருவார் செல்வார் வாக்கில் யாத்திரை விசேஷங்களைக் கேட்டுக் களிப்பது ஒரு போதுபோக்காகக் கொள்ளப்பட்டிருப்பதுண்டு. அந்த ரீதியில், மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீமத் அனந்தாசார்ய ஸ்வாமிக்கு ஒரு விண்ணப்பம் விடுத்திருந்தேன் — "தேவரீர்களின் யாத்ரா விசேஷங்களை ஒரு வியாஸமாக வெழுதி யுபகரித்தால் ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டு அடியேனும் மகிழ்ந்து உலகத்தையும் மகிழ்விக்க ஹேதுவாகும்" என்று. அந்த ஸ்வாமி சிறியேனுடைய இச்சிறு வேண்டுகோளைக் கனக்க மதித்துப் பரமக்ருபையுடன் எழுதியனுப்பிய கட்டுரை இதன் கீழ்ப் பிரசுரிக்கலாகிறது! பத்ராதிபர். P. B. A.

---

## வதரி வணங்கிய வரலாறு (மற்றும் வடநாட்டுத்திருப்பதிகள் உள்பட)

(P. B. அனந்தாச்சாரி, அட்வகேட், மதராஸ் 1)

திருமங்கையாழ்வார் நம்போல்வார் உஜ்ஜீவிக்கும் வண்ணம் வற்புறுத்தித் திருவாய் மலர்ந்தருளிய பெரியதிருமொழி—மூன்று நான்குபதிகங்களில் சித்தரித்துள்ள கங்கைக்கரை யுள்ளானை, தண்டு ஊன்றி நடவாமுன் வதரி ஆச்ரமம் சென்று சேர்ந்து வணங்கும் வாய்ப்பு அடியேன் பக்க நின்றாரின் பெருந்துணை கொண்டு "ஸ்ரீபத்திரி ஸ்பெஷல்" யாத்திரை நிர்வாகிகள் மூலம் இவ்வாண்டு கிட்டியது. 6-5-67 தேதியன்று மாலை 4மணிக்கு சென்டிரல் ஸ்டேஷனில் நாங்கள் 50 பேர் [பந்து மித்திரர்களுடன்]. எங்களுக்காக ஏற்படுத்தியிருந்த தனி வண்டி விஜயவாடா பாசஞ்சரில் இணைக்கப்பட்டுப் புறப்படலானோம்.

### நெல்லூர், விஜயவாடா, மங்களகிரி.

முதலில் நெல்லூரில் தங்கி வடபெண்ணையாற்றங்கரையில் ஸ்ரீ ரங்க நாதனைச் சேவித்து, பிரசித்திபெற்ற அக்கோயில் கண்ணாடியறையில் உடையவர் மஹோத்ஸவங் கண்டருள எழுந்தருளியிருந்து நடைபெற்ற திருமஞ்சனப்

பாங்கையநுபவித்தோம். அங்குநின்றும் விஜயவாடா சேர்ந்து கிருஷ்ண ஸ்நானம்செய்து மங்களகிரி க்ஷேத்திரத்திற்குப் போய் மலைமீது ஸேவைஸாதிக்கும் ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்மனையும் செஞ்சு லக்ஷ்மித் தாயாரையும் சேவித்தோம். இங்கு பானக நரசிம்மருக்குக் கற்கண்டு பானகம் ஸமர்ப்பிக்க அதில் பாதிபாகம் அமுது செய்து 'களுக்' என்றதும் மற்ற பாதிபாகம் பக்தர்களுக்கு விநியோகமாகக் கொடுக்கப்படுகிறது. இதன் மருமம் நம்புத்திக்கு எட்டவில்லை. வியக்கத்தக்கதே.

### பத்ராசலம், ஸிம்ஹாசலம்.

பிறகு, கோதாவரீதீரத்தில் அற்புதமாக விளங்கும் பத்திராசல க்ஷேத்திரத்தையடைந்து அங்கு ஸ்ரீகோதண்டராமன், லக்ஷமணன், சீதை உற்சவ விக்கிரகங்கள் கம்பீரமாக ஸேவைஸாதிக்க ஸேவிக்கும் பாக்கியம்பெற்றோம். அங்கு சமீபத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள கல்யாண மண்டபம் காரைக்குடி சிற்பியின் கைத்திறனைக் காட்டுகிறது. அங்கிருந்து ஸிம்மாசலத்துக்குச் சென்று மலைமீதேறி ஸிம்மதாரையில் தீர்த்தமாடி சந்தனமயமாய் மாமணி மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீவராஹ நரசிம்மனை சேவித்தோம். கர்ப்பகிருகத்தில் விசாலமாகப் பிரதக்ஷிணம் செய்யும் வசதியுள்ள சன்னிதி இங்குதான் கண்டோம். இம்மூலவரின் திருமேனிசேவை வருடத்தில் ஒரே தினந்தானும்.

### பூரீ—ஜகந்நாதம்.

ஸிம்மாசலத்திலிருந்து நேரே பூரி என்னும் ஸ்ரீ ஜகந்நாத க்ஷேத்திரம் போய்ச் சேர்ந்தோம். முதலில் சமுத்திரஸ்நானம்செய்து, பிறகு மார்க்கண்டேய தடாகத்தில் தீர்த்தமாடி கோவிலுக்குள் போனோம். இதன் விஸ்தீரணம் தென்னரங்கம் பெரிய கோயிலுக்கு சமம் என்று சொல்லலாம். உயரமோ அதற்கும் மேலிருக்கும். கோபுரவாயிலிலும், சந்நிதிகளிலும் தென்கலைத் திருமண்காப்பு அழகாகப் பதிந்து பிரகாசிக்கிறது. இக்கோயில் பூராவும் சரிவரப் பார்த்து சேவிப்பதற்கு பண்டாக்களின் உதவி அவசியமாகும். அவர்களுக்குக் குறைவும் இல்லை. மூலஸ்தானம் உயர்ந்த மண்டபம். ஸ்ரீ ஜகந்நாத் என்னும் கண்ணபிரான், தமையன் பலராமன், தங்கை சுபத்திரை மூவரும் கம்பீரமாக நிற்கும் திருக்கோலம். இதர கோவில்களில் உள்ள மூல விக்கிரகங்களைப்போல சிலையினுலோ உலோகத்தினுலோ செய்யப்படாமல் தெய்வீக மரத்துண்டுகளால் ஆக்கப்பட்டதாகவும், திருமேனியில் சிலபாகம் பூர்த்திபெறவில்லை என்றும் சொல்லப்படுகிறது. கீழ் மண்டபத்தில் எழுந்தருளப் பண்ணியிருக்கும் ஸ்ரீஸுதர்சன ஆழ்வாருக்குத் தான் திருமஞ்சனம் திருவாராதனம் முதலியன நடைபெறுகின்றன். நித்தியப்படி 'போகம்' என்னும் அமுது கண்டருளப் பண்ணுவதும் இக்கோயிலில் பெரிய விசேஷம். திருமடப் பள்ளியே ஒரு பெரிய மஹால். ஏறக்குறைய 500–600 அடுப்புகள் ஒருங்கே எரிந்துகொண்டு இருப்பதை ஒரு சிறு துவாரம் வழியாகத் தான் பார்க்கலாம். நூற்றுக்கணக்கான பானைகளில் பலவித பிரசாதங்களும், பணியாரங்களும் தயாராகி வந்துகொண்டே யிருக்கும். கறிகாய் திருத்திக் கொடுப்பவர் நூறு பேர்களுக்கு மேல் இருக்கிறார்கள். அவர்களது கைங்கரிய

பாணியே ஒரு தனிப்பட்ட அழகு. சுமார் 50 அடி ஆழமுள்ள கிணற்றிலிருந்து தீர்த்தம் முகந்து கொடுத்துக்கொண்டே யிருப்பவர்கள் 20 பேர்; இப்படிப்பட்ட போகத்தின் போக்யதையை யாவரும் காணலாம். வித்தியாசமில்லாமல் விநியோகமாகும். "ஸர்வம் ஜகந்நாதம்". என்கிற முதுமொழி நினைவுக்குவரும். தென்னாட்டு ஆசாரம் இங்கு காண்பதரிது. இவ்வூரில் ரதோத்ஸவம் வருஷத்தில் ஒருவாரம் விசேஷமாக நடக்கும். ஸ்ரீபிருந்தாவன கண்ணன் கம்சனை வதம் பண்ண மதுரைக்குப் போகும் ஐதிஹ்யம் என்கிறார்கள். இக்கோயிலிலுள்ள விமானங்கள் வானளாவி விசித்திரமான பிம்பங்களுடன் பிரகாசிக்கின்றன. பல வர்ணங்களால் தீட்டிய புராணப்படங்கள் உட்புற சுவர்களை அலங்கரிக்கின்றன.

## கல்கத்தா

பூரியிலிருந்து கல்கத்தாவிற்குப் போனோம். விவேகாநந்தர் சாலையில் நிர்மாணிக்கப்பட்டுள்ள ஸ்ரீவைகுண்டநாதன் தேவஸ்தானத்தில் நாங்கள் 8 பேர் இரண்டுநாள் தங்கியிருந்தோம். கோயிலின் சுவர், தரை எல்லாம் சலவைக் கல் மயம். ஸேவையும் சாத்துமறையும் நித்தியமும் நம் தென்னாட்டு சம்ப்ரதாயப்படி கிரமமாக இச்சந்நிதியில் நடக்கின்றன. ஸ்ரீ லக்ஷ்மிதேவி, ஸ்ரீ ஆண்டாள் சந்நிதிகள் வெகு ரம்யம். இப்பட்டினத்தில் ஹௌராபாலம், பிர்லா பிளானடோரியம், தக்ஷிணேச்வரர் ஆலயம், ஸ்ரீ லக்ஷ்மி நாராயண மந்திர், வெள்ளை நிறப் புலிகள் முதலிய அநேக விலங்குகள் உள்ள "அலியூர் ஜூ" என்னும் பெரிய மிருகக்காட்சி சாலை பார்லிய கன்ஞ் பக்கத்தில் புதிதாகக்கட்டி இவ்வருஷம் ஸம்ப்ரோக்ஷணமாகிய ஸ்ரீராமர் கோயில், விக்டோரியா மெமோரியல் என்னும் விசித்திர வேலைப்பாடுகள் கொண்ட உயர்ந்த கட்டிடம், உலகத்திலேயே பெரிய ஆலமரமுள்ள "பொடானிகல் கார்டன்ஸ்" ஆகிய முக்கிய ஸ்தலங்கள் பார்க்க வேண்டியவை.

## கயாக்ஷேத்திரம்

கல்கத்தாவிலிருந்து, கயா க்ஷேத்திரம்வந்து இரண்டு நாள் தங்கியிருந்து சிராத்தாதிகளை கிரமேண செய்து முடித்தோம். பல்குனீ நதியில் ஊற்று நீர்தான். 'கயர்வாலி' என்ற பெயரிலேயே நாம் கொண்டிருந்த அபிப்பிராயங்கள் தவறு என்பது அந்த ஸ்வாமிகளை நேரில் ஸேவித்துக் கலந்து பேசியபோது தெளிவாயிற்று. அவர்களிடம் உள்ள பக்தியும், பிரேமையும், திருப்தியும் கண்யமும் போற்றத்தக்கன. இரவு விஷ்ணு பாத அலங்காரமும், மத்யானம் அக்ஷய்வட ஆசீர்வாதமும் அவர்களே சிரத்தையுடன் செய்வது மெச்சத்தக்கது. இவ்வூர் அருகாமையிலுள்ள புத்த கயா என்ற ஸ்தலத்துக்குப் போய் ஆங்கு சீன தேசத்தார் கட்டியுள்ள புத்தர் மந்திரமும், திபேத்தியர் கட்டியுள்ள புத்தர் ஆலயமும் பார்த்தோம். தங்க முலாம் பூசிய மிகப் பெரிய புத்த சிலைகள் உயர்ந்த பீடங்களில் அழகாக அமைந்துள்ளன. தர்ம சக்கரம் என்ற கனமான வட்ட வடிவ ஸ்தூபியடியில் சுழலும் இயந்திரத்தில் படிய வைத்திருப்பதால் நாம் அதைச் சுழற்ற முடிகிறது. கௌதம புத்தருக்கு ஞானோதயமான இடம் என்று சில ஸ்தலங்களைக் காட்டுகிறார்கள்.

## நேபாளயாத்திரை நோக்கம்

அடுத்தபடியாக நாங்கள் ரயிலைவிட்டு இறங்கின இடம் பாட்னு நகரம். இங்கிருந்து மஹேந்திரா காட்டுக்குப்போய் கப்பலில் பிரயாணமாய் கங்கை நதியைத் தாண்டி பலாசாகாட் என்னும் ரயிலடிக்கு வேறு தனிப்பெட்டியில் ஏறி ராக்ஸால் என்ற ஜங்ஷனையடைந்தோம். இங்கிருந்து 128 மைல் தூரத்திலுள்ள நேபாள மலைப்பிரதேசத்தின் தலைநகரமான 'காட்மாண்டு'க்கு பஸ்ஸில் போய்ச் சேர்ந்தோம். 6, 7 ஆயிரம் அடிக்குமேலுள்ள மலைச்சரிவுகளைச்சுற்றிக் கொண்டு பள்ளத்தாக்குகளையும் சிற்ருறுகளையும் பாலங்களின் வழியாய்த்தாண்டி கடைசியாக 4, 5 ஆயிரம் அடி உயரமுள்ள ஷி நகரை அடைந்தோம். பாக்மதி என்னும் நதிக்கரையில் பிரம்மாண்டமாக ஸ்தாபித்துள்ள பசுபதிநாத் கோவில் அத்தேச ராஜாவின் ஆதீனத்தில் உள்ளது. இத்தேவஸ்தானத்தின் ஐச்வரியமும் பெருமையும் அங்குள்ள பல விமானங்கள் கணக்கில்லாத கதவுகள் மண்டப சுவர்கள், பெரிய நந்திகேச்வரர், த்வஜஸ்தம்பம் முதலியன வெள்ளித் தகட்டினுல் மூடப்பட்டு முக்கிய பாகங்கள் தங்கத்தால் இழைக்கப்பட்டிருப்பதி லிருந்து நன்கு விளங்கும். இக் கோயிலைச் சேர்ந்த விடுதியில்தான் எங்களுக்குச் சௌகர்யமான இடம் கிடைத்தது. ஷி ஆற்றுக்கு அக்கரையில் ஸ்ரீ வெங்கடேச்வரர் எழுந்தருளியிருக்கும் தென்கலை தேவஸ்தானம் உள்ளது. இந்தத் தேச எல்லைகளில் உள்ள சீனு, ஜப்பான், ஹாங்காங் முதலிய இடங்களிலிருந்து சுங்கவரி இல்லாமல் பலவித துணி மணிகளும் விசித்திர சாமான்களும் இறக்குமதி யாவதால் அவைகள் மிக மலிவாகக் கிடைக்கின்றன. நாங்களும் டெரிலின் பட்டு ரகத் துண்டுகளும் ஷர்ட்டுகளும் வாங்கி வந்தோம். ஆனுல் நேபாள நாட்டுக்கு நாங்கள் சென்ற முக்கிய நோக்கம் ஏமாற்றமாக முடிந்தது, நாராயண காட்டு கண்டகிநதி, சாளக்கிராமம் இம் மூன்று க்ஷேத்திரங்களும் சுலபத்தில் கிட்டாதவை என்று அங்கு விசாரித்த பிறகு ஏற்பட்டது. அங்கிருந்து திரும்புகாலில் மஹேந்திர காட்கங்கையில் தீர்த்தமாடி பாட்னுவுக்கு நான்காம் நாள் வந்து சேர்ந்தோம்.

## பனரஸ் என்கிற காசி

நாங்கள் மதராஸைவிட்டுப் புறப்பட்ட 16:வது நாள் பனரஸ் என்னும் வாராணஸி (காசி) பட்டணத்தில் இறங்கினேம். விசாலாக்ஷி காட் என்ற கங்கைக் கரை அருகிலுள்ள தர்ம சாலையில் இரண்டு நாட்கள் தங்கினேம். அஸ்ஸி காட், ஹநுமான் காட், தச அச்வமேத காட், பஞ்ச கங்கா காட், மணிகர்ணிகா காட் என ஐந்து முக்கிய ஸ்நான கட்டங்களுக்குப் படகில் சென்று தீர்த்தமாடி, பிரவாக அழகையும், கரை ஓரமாயுள்ள கட்டிடங்களையும் கண்டு களித்தோம். மேற்படி கட்டிடங்களுக்கு நடுவிலேயே அரிச்சந்திரா காட்டும், மஹாச்மசான காட்டும் இருப்பதால் பிரேதங்கள் வந்து கொண்டும் எரிந்து கொண்டும் இருந்ததும் ஒரு விநோதம். மத்யானம் ராம்நகருக்குச் சென்று காசி ராஜன் அரண்மனையையும் அருகிலுள்ள மியூசியத்தையும் பார்த்தோம். அங்கிருக்கும் வேலைப்பாடுகள் நிறைந்த தந்த சாமான்களும் பழைய காலத்துத் துணிமணிகளும் புராதன ஆயுதங்களும் பார்க்கத் தக்கவை. ஸம்ஸ்க்ருத கலை அபிவிருத்திக்காகவே இக்

காசியில் அமைக்கப்பட்டிருக்கும் காலேஜும் ஹாஸ்டலும் மிகப் பெரியவை. புத்தக சாலைகள், விளையாட்டு மைதானங்கள், தோட்டங்கள் முதலிய எல்லா சௌகரியங்களும், பலவித தேசங்களிலிருந்து வரும் வித்தியார்த்திகளுக்கு ஏற்றதாயுள.

## பிரயாகை—சித்ரகூடம்

அடுத்தபடியாக நாங்கள் இறங்கியது அலஹாபாத். அங்கிருந்து மந்தாகினி நதி தீரத்தில் 90 மைலுக்கு அப்பாலுள்ள சித்திரகூட க்ஷேத்திரத்துக்குப் போய் வந்தோம். திரிவேணி சங்கமத்திற்கு அதாவது யமுனா, கங்கா, சரஸ்வதி (அந்தர் வாஹினீ) இம் மூன்று புண்ணிய தீர்த்தங்களும் ஒன்றுசேருமிடத்திற்குப் படகில் சென்று, மங்கள ஸ்நானம் செய்து ஆனந்த பவன் என்ற நேருஜியின் பங்களா, மியூசியம், ஸ்ரீராம சீதா மந்திரங்கள் கண்டோம். ஹனுமான் சஞ்சீவி மலையைத் தூக்கிக் கொண்டு திரும்பும்போது இங் கோரிடத்தில் அரக்கர் போலி வேடத்தில் செய்த ராம பஜனையில் மயங்கி மல்லாந்து படுத்துறங்கியவாறு மிகப் பெரிய அனுமச் சிலை ஒன்று உயர்ந்த மண்டபத்தின் நடுப்பள்ளத்தில் அமைக்கப் பட்டுள்ளது. யாத்ரீகர்கள் பலர் இங்கு பூஜை செய்கிறார்கள்.

## அயோத்யா—நைமிசாரணியம்

பிறகு, பைஜாபாத்தில் இறங்கி அயோத்திமா நகர் சென்றோம். தெளிந்து பாயும் சரயூ நதியில் தீர்த்தமாடி 'அம்மாஜீ மந்திர்' என வழங்கும் மண்டயம் பார்த்தசாரதி அய்யங்கார் கட்டுவித்த கோயிலின் எம்பெருமான்களைச் சேவித்தோம். மறு நாள் ரயிலேறி நைமிசாரண்ய க்ஷேத்திரத்திற்குப் போய்ச் சேர்ந்தோம். அரண்ய ஸ்வரூபியாய் பகவான் இங்கு வியாபித்து இருப்பதால் தனிக் கோயில் கிடையாது. கோமதிநதி தீர்த்தமும், சக்ரத்தடாக தீர்த்தமும் தான் இங்கு விசேஷம். இங்கே பரமபதித்த அஹோபில மடத்து ஸ்வாமிக்கு ஊருக்குள்ளே பிருந்தாவனம் கட்டப்பட்டிருக்கிறது. இவ்விடங்களில் வெயில் மிகக் கடுமையாயிருந்தது. ஆந்தி என்கிற மணற் காற்றும் சில சமயம் வீசி எங்களைத் திணற வைத்தது. சூரியாஸ்தமனம் 7-30 மணிக்குமேல் தான். உதயமோ 4-30 மணிக்கே.

## ஹரித்வார்—ஹ்ருஷீகேசம் - லக்ஷ்மண ஜூலா

நைமிசாரண்யாத் நேராக ஹரித்துவாரம் போய்ச்சேர்ந்தோம். இங்கு மஹாவிஷ்ணு தம் திருவடியைச் சார்த்தியதாகக் கூறுவர். அதனால் ஹரியின் வாசல் என்று இவ்வூருக்குப் பெயர். விஷ்ணு பாத ஸ்தல பக்கலில் ஹர்-கீ-பைடி என்ற ஸ்நான கட்டமும் பிரம்ம குண்டமும் உள. இந்தக் கட்டத்திலும் சத்திரங்களுக்குப் பின்புற வாசலிலும் கங்கை நதியின் பிரவாகமும் அதன் இனிய ஓசையும் நம் மனதைக் கவர்கின்றன. கரை ஓரமாகவே காலையிலும் மாலையிலும் மணிக் கணக்காக உட்கார்ந்திருந்தாலும் நம் ஆசை தீராது. சிறியதும் பெரியதுமான பல வர்ணங்களில் பளிச் பளிச் சென்று ஆடி அசைந்து குறுக்கும் நெடுக்குமாக

ஓடி விளையாடும் மச்சங்களையும் பார்த்துக்கொண்டே 'மச்சா–க–கோலி' என்று விற்கும் ஷி மீன்களுக்கு ஆகாரமான மைதா மாவினால் செய்த சிறு உருண்டை களைத் தூவிக்கொண்டிருக்கலாம். இந்த மீன்களை ஒருவரும் பிடிப்பதில்லை. பாவங் களைப் போக்குமிடத்தில் ஜீவ ஹிம்சையைச் செய்ய எவரும் முன்வருவதில்லை போலும்! ஹரித்வாரத்தில் எந்நாளிலும் ஆயிரக்கணக்கான யாத்திரீகர்களைக் காணலாம். இங்கு அகப்படாத வஸ்து ஒன்றும் இல்லை என்று எங்களுக்குத் தெரிய வந்தது. விலையும் அதிகமில்லை. ஆனால், இட நெருக்கடிதான் அதிகம். காலை யிலும் மாலையிலும் ஆயிரக்கணக்கானவர் இப்புண்ணிய நதியில் தீர்த்தமாடுகிறார் கள். விளக்கேற்றும் சமயத்தில் நூற்றுக்கணக்கான தொன்னை தீபங்கள் கரை யோரமாக மிதந்தோடுவது ஓர் அழகான காட்சி.

அடுத்த படியாக 15 மைல் தூரம் பிரயாணமாகி ஹ்ருஷீகேசம் சென்றோம். இங்குள்ள சிவாநந்த ஆச்ரமம் சிறு குன்றின் மீது பல வசதிகளுடன் நிர்மாணிக் கப்பட்டுள்ளது. கங்கைக்கு அக்கரையில் கீதாபவன், ஸ்வர்க்காச்ரமம், பரமார்த்த மந்திரம், தோதாத்ரி நாத்மடம் முதலிய ஒவ்வொன்றும் படர்ந்த ஸ்தலங்களில் "பார்க்" பாணியில் வகுக்கப் பட்டு அநேக மண்டபங்களும் சிறு கோயில்களும் பக்திரசம் ததும்பும் புராணப் படங்களும் பிம்பங்களும் ஆங்காங்கு நேர்த்தியாகவும் நாகரீக முறையிலும் அமைக்கப்பட்டுள்ளன. கதா கால க்ஷேபம் இந்தி பாஷை யில் தினசரி மாலையில் நடைபெறுகிறது. இங்கு பாபா–காளி–கம்பளி வாலா வின் சத்திரம் மிகப் பெரியது. அங்கிருந்து லக்ஷ்மண ஜூலாவைப் போய்ப் பார்த் தோம். இந்த தொங்கு பாலம் ஒரு அதிசய சாதனை. இதன் நடுவில் நின்று லேசாக குதித்தும் பார்த்த போது பாலம் முழுவதும் "ஸ்பிரிங்" போல் அசைந்து ஆடிற்று. அதன் கீழே எங்கும் ஆற்றில் ஊன்றிய கம்பமே கிடையாது. சுமார் அரை மைல் நீளம் கங்கையின் குறுக்கே அம்பலத்தில் அத்தியாச்சர்யமாகப் பல நூற்றாண்டுகளாக இப்பாலம் பழுதாகாமல் நிற்பது லக்ஷ்மணன் சக்தி தானே! இத்துடன் ஹிமாசல அடிவார க்ஷேத்திரஸேவை முடிவு.

## ஸ்ரீபத்ரிகாச்ரமப் பயணம்

ஜூன் மாதம் முதல் தேதி ஸ்ரீபத்ரி க்ஷேத்திரம் அணுக ஆயத்தமாகி ஹ்ருஷீகேசத்தில் பஸ்ஸில் காலை 6-மணிக்கு ஏறினோம். 128 மைல்களுக்கு அப் பாலுள்ள பிப்பல் கோட்டில் சாயந்திரம் 6-மணிக்கு இறங்கினோம். வழியில் தேவ ப்ரயாகை, ருத்ரப் பிரயாகை, கர்ணப்பிரயாகை முதலியன கண்ணுற்றோம். மறு நாள் காலை 7-மணிக்கு மறுபடி பஸ் ஏறி ஜோசீ மடத்துக்கு 9–மணிக்குப் போய் இறங்கி ஒரு நாள் தங்கினோம். நரசிம்மதாரா ஒன்று இரு கோமுக வழியாய்ப் பெருகும் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பக்கத்திலுள்ள புராதன வசுதேவர் கோயிலை வலம் வந்தோம். இவ்விடத்திலுள்ள ஸ்தலங்களுக்குப் போகவர ஆங் காங்கு மலைச் சரிவுகளில் ஏறி இறங்கி நடக்கவேண்டும். மறுநாள் காலை 7-மணிக்கு வேறு பஸ் ஏறிப்போகும்போது வதரி ஆச்ரமசமீபத்தில் இறங்கவேண்டியிருந்தது. நேரே கோயிலடிவரை பஸ் வசதிசெய்து இருந்தபோதிலும் கிட்டத்திலாவது சிரத்தையுடன் சிரமப்பட்டு நடந்து வரட்டும் என்று அப்பகவான் நியமித்தானே

என்னவோ ஒருபனிக்கட்டி மலையின் பாகமொன்று சரிந்து நடுப்பாதையில்விழுந்து உருகாமல்கிடந்தது. அதன்மீது சுமார் 100 அடி நடந்து இடையூற்றைத்தாண்டி அப்படியே பாக்கி ஒன்றரை மைல் தூரத்தையும் கால்நடையாகக் கடந்தோம். எங்களது சாமான்கள் எல்லாம் குதிரைமீதேறிவந்தன. ஒருவர்மாத்திரம் கண்டி என்னும் கூடைமேல் ஏறிவந்தார். இச்சிறியதூரம் நடந்துபோனபோதுதான் 183 மைல் தூரமுள்ள பூராவழியையும் பஸ் வசதி ஏற்படும்முன் முன்னுள் யாத்திரிகர் எப்படி நடந்து கடந்தார்களோ என்ற சிந்தனையில் ஆழ்ந்தோம். 'பத்ரிநாத்' என்ற வதரி ஆச்ரமந்திற்கு முன்னுடியேஉள்ள இராமானுஜ கூடத்தில் தங்கியிருக்க வசதிசெய்துகொண்டோம். முதலில் குளிரைப்போக்கிக்கொள்வதற்காக நேரே சன்னிதிக்குப்போய் அதன் எதிரேஉள்ள தப்த அல்லது உஷ்ணகுண்டமென்னும் வெந்நீர்த்தடாகத்தில் தீர்த்தமாடினேம். இந்தத் தெய்வீக வசதி யாத்ரீகர்களுக்கு இல்லையேல் அவ்வெம்பெருமானை சேவிக்க முடியாதென்றே சொல்லலாம். சாதாரணமாக இந்த ஜலத்தின் உஷ்ணம் நம்தேகத்துக்கு வேறு இடத்தில் தாங்காது. கொதிக்கும் சூடாகஇருந்தபோதிலும் அவ்வூர்க் குளிருக்குப் பாங்காக இருந்தது. இத்தடாகத்தின் மண்டபத்திலுள்ள தாரைவழியாகப் பெருகும் ஜலம் பின்னும் உஷ்ணமாய் இருப்பதால் சங்கல்பம் முடிந்ததும் ஒரே நிமிஷம் தான் அக்கோமுகவாயிலில் நிற்க இயலும். இதன் பக்கத்தில் சூரியகுண்டமென்று சூடு குறைவான தேக்கம் ஒன்றுள்ளது. ஆனல், அடுத்தபடியுள்ள நாரதகுண்டம் என்னும் இடத்தில் பனிக்கட்டி நீரே இருப்பதால் நம்மால் அதில் தீர்த்தமாடிக் கரைஏற முடியாது. ஹரித்வாரத்தின் தரைமட்டத்துக்கு மேல் 10,250 அடி உயரத்தில் பத்ரிநாதன் கோயிலிருப்பதால் குளிருக்கும் மழைக்கும் குறைவேஇல்லை.

### பதரீநாராயணமந்திரஸேவை

பத்ரி நாராயணனை அருகில் நிதானித்து நன்ருகச் சேவிக்க வேணுமென்று திருமஞ்சன (அபிஷேக) சீட்டு ஒன்று ரூ. 101/– வீதம் நாங்கள் 5, 6 பேர் கட்டி வாங்கினேம். ஒரு சீட்டுக்கு இருவரைத்தான் கர்ப்பக்ருஹம் முன்பக்கம் தங்க அனுமதிக்கிருர்கள். அவ்வாறு வரும் 40, 50 பேர்களையும் உட்கார வைக்கிருர்கள். சுமார் ஒரு மணி அவகாசத்திற்கு மேல் 5, 6 பேர் வேதமும் திருமஞ்சன பாசுரங்களும் விநோதமாக ஸேவிக்கிருர்கள். சாளக்ராம சிலா ரூபமாயுள்ள மூலவருக்குத் திருமஞ்சன பூர்த்திவரை சிறிய வஸ்திரமும் கூட சாத்தவில்லை. நிதானமாகவும் பயபக்தியுடனும் சட்டையும் போர்வையும் தரித்துக்கொண்டு ஒரு மலையாள நம்பூதிரி (ரவால்) அர்ச்சகர் பாலும், தயிரும், தேனும் பழமும் கொண்டு மஞ்சன மாட்டி வைக்கிருர். திருவாராதனமும் தூப தீபங்களும் ஸமர்ப்பிக்கிருர். அப் போதைக்கப் போது பெருமாள் திருமேனி பூராவையும் துரிதமாகத் துடைப்பது ஒர் அழகு கலந்த விசித்திரம், திரை சேர்ப்பதில்லை. சாத்துப்படி அலங்காரமும் நம் கண் எதிரிலேயே படிப்படியாய்ச் செய்கிருர். கிரீடமும் ஆபரணங்களும், மாலைகளும் சாத்தியதும் வாமன ஸ்வரூபியாகக் காட்சியளித்த நாராயணன் பக்கலில் நிற்கும் நரனுக்கு உபதேசம் செய்யும் கம்பீரமும் உயர்வும் ஜுவலிக்க சேவை சாதிக்கிருர். பத்மாஸந பந்தம் மறைந்து விடுகிறது. வலது பாரிசத்தில் கருடாழ்வாரும் குபேரனும் நிற்பது ஸேவையாகிறது. படத்தில்

காணும் விக்நேச்வரர் அங்கு புலப்படவில்லை. பத்ரிநாதன் வலது கையில் சக்கரத்தாழ்வான் பிரகாசிக்கிறான். ஆனால் மற்றொரு கரத்தில் சங்கத்தைக் காணோம். வடநாட்டில் இன்னும் பலகோயில்களிலும் இம்மாதிரியே எம்பெருமான் ஸேவை சாதிக்கிறான். இடது திருக்கை தாங்கும் ஆயுதம் என்னவோ! ஏழு ரூபாய்க்கு ஒரு அர்ச்சனை டிக்கட்டு தருகிறார்கள். இரண்டுபேர் வீதம் அனுமதிக்கப்படுகிறார்கள் சுமார் 100 பேருக்குமேல் உள்ளே நின்று ஸேவித்துவிட்டு பிரஸாதம் பிறகு பெற்றுக்கொள்ளலாம். இதற்குள் 12 மணி ஆகிவிடுகிறது.

## பிரம்மகபாலபிண்டப்ரதானம்

அருகேஉள்ள ப்ரஹ்மகபாலத்தில் சேர்ப்பதற்குப் பிணடப் பிரஸாதம் இரண்டு ரூபாய் கட்டிய நபர்களுக்கு சீட்டு பிரகாரம் விநியோகமாகிறது. அலக நந்தா என்ற பெயரில் சந்நிதி அருகாமையில் பாய்ந்தோடும் கங்கா தீரத்தின் மேல்பக்கம் ஒரு பெரிய பாறையை பிரம்ம கபாலம் என்கிறார்கள் அதன்மீது சுமார் 100 பேர் ஒரே சமயத்தில் பண்டாவின் ஏற்பாடு ப்ரகாரம் வரிசையாக உட்கார்ந்து பிண்டங்களைவைத்து தத்தம் செய்தோம், மந்திரதந்திரங்கள் ஓதிய சாஸ்திரிக்கு உசிதப்படி பஹுமானம்கொடுத்து திருப்திசெய்தோம். பிறகு, பிண்டங்கள் சேகரித்துக் கங்கையில் இறங்கிச் சேர்த்து விட்டோம். கைகளை அலம்பிய போது விரல்கள் மரத்துப் போயின, அன்று சாயந்திரம் சந்நிதிக்குள் ஒருபக்கம் ராமாநுஜ திவ்யாஜ்ஞைப்படி கால க்ஷேபம் நடந்து கொண்டிருந்தது. எங்களுடன் கூடி எழுந்தருளியிருந்த ஸ்ரீ. உ. வே. வித்வான் வரதாச்சார்ய ஸ்வாமி அடியேன் விண்ணபத்துக்கு இணங்கியதின் பேரில் தேவஸ்தான ஆபீஸர் மற்றொரு பக்கம் அவரது காலக்ஷேபம் நடக்க ஏற்பாடு செய்தார். 'திரு மந்திரார்த்த ஸாரம்' என்ற தலைப்பில் கச்சிதமாகவும் கனகாபிஷேகமாகவும் ஷெ வித்வான் ஸ்வாமி ஒருமணி அவகாசத்தில் அம்மஹா மந்த்ரத்தின் மஹிமையை தமிழில் பிரவசனம் செய்து அருளியதனால் தென்னாட்டிலிருந்தும் டில்லியிலிருந்தும் அகஸ்மாத்தாய் வந்திருந்த பலரும் எங்களுடன் கூடிஇருந்து மேற்படி கால க்ஷேபத்தை சிரவணம் செய்து கிருதார்த்தரானார்கள். அதே சமயம் அங்கு எழுந்தருளின வித்வான் ஸ்ரீ. உ. வே. நல்லான். ராமகிருஷ்ண அய்யங்கார் ஸ்வாமியும் சிறிது நேரம் உபந்நியாசம் செய்தார்.

## வதரியில் நின்றும் மீளுதல்

மறுநாள் மூன்றுவது வேளையாக தப்த குண்டஸ்நானமும் ஸ்ரீ பத்ரிநாத ஸேவையும் கிடைக்கப்பெற்று 9-மணிக்கு ஹரித்வாருக்குத் திரும்ப ஆயத்தமான தும் கோயில் பக்கத்துக்கே பஸ் நேராக வந்துவிட்டது. வழியிலிருந்த பனிக் கட்டித் தடைநீங்கிவிட்டது. ஆனால், பஸ் டிக்கட்டுகள் வாங்குவதற்குத்தான் அதிக சிரமமாய்விட்டது. எப்படியோ சமாளித்துக்கொண்டு எல்லோரும் பஸ் ஏறி 2-மணிக்குள் ஜோசீமட்டுக்கு வந்துசேர்ந்தோம். அங்கு மறுநாள் நரசிம்மதாரையில் தீர்த்தமாடி அமாவாஸை தர்ப்பணாதிகளை முடித்துக்கொண்டோம். அங்கிருந்து வேறு பஸ்ஸில் ஏறி ஸாயங்காலம் ருத்ரப்பிரயாகையில் இரவு தங்கி மறுநாள் 6-மணிக்கெல்லாம் அதே பஸ்ஸில் பிரயாணமாகி மத்தியாணம் 2–30 மணிக்கு

நேரே ஹிருஷீகேச ரயிலடிக்கு வந்துசேர்ந்து உடனே வந்த ரயில்வண்டியேறி ஹரித்துவாரம் அடைந்தோம். இத்துடன் பத்ரியாத்திரை பூர்த்தியாய்விட்டது. ஹ்ருஷீகேசத்திலிருந்து பத்ரிகாச்ரமம்வரை போகும் போதும் திரும்பும் போதும் வழிபூராவும் யாத்ரிகளின் கர்ணம்ருதமான கோஷம் " பத்ரீ விசால்-கி-ஜே "

## அம்ருதஸர்—குருக்ஷேத்ரம்.

மறுநாள் அதாவது 9-6-67ம் தேதி அம்ருதசரஸில் இறங்கி 'பொன் கோயில்'என்று பிரஸித்திபெற்ற சீக்கியர் மத ஸ்தாபனத்தைப் போய்ப்பார்த்தோம். நாலாபக்கமும் படர்ந்த தடாகத்தின் நடுவில் இப்பெரிய கோயில் அத்யாச்சரிய மாக நிர்மாணிக்கப்பட்டுள்ளது. சீக்கிய வேதபாராயணத்துக்காகப் பல மடங்களும் மாடங்களும் விசித்திர வேலைப்பாடுடன் கட்டப்பட்டு வெள்ளியாலும் தங்கத் தாலும் சுவர்களும் கதவுகளும் விமானமும் பூசப்பட்டு பிரகாசிக்கின்றன. இவ் வாலயத்துக்குட்புறமே மீயூசியமும் ஆயுதசாலையும் இருக்கின்றன. அரசியல் போலீஸார் இக்கோயிலுக்குள் பிரவேசிக்கக்கூடாது. அக்கோயில் வழக்கப்படி சிரஸில் ஏதாவது துணிகட்டாமல் ஒரு புருஷனும் நுழையக்கூடாதாம். இது விஷயம் தெரியாமல் நாங்கள் அக்கோயில் வாசலில் போகும்போது ஒரு ஜவான் அடியேனை மடக்கிச்சொன்ன ஆக்ஷேபம்அவனதுபாஷை புரியாது விழித்தேன்; பக்கத்தில் தற்செயலாய் வந்தஒருவர் ஆங்கிலத்தில் தலையில் ஏதாவது கட்டிக் கொண்டு உள்ளேபோகச் சொன்னதும் முண்டாசுகட்டிக்கொண்டோம். பிறகு, அருகாமையிலுள்ள இக்கோயில் பாணியிலேயே விசாலமான வேரூர் தடாக நடுவில் கட்டியுள்ள லக்ஷ்மிநாராயண மந்திர் என்ற நம் கோயிலுக்குச்சென்று சேவித்தோம். இதில் ராமலக்ஷ்மண சந்நிதியும் அழகாக உள்ளது. இங்கே குசலவர் பிறந்து வளர்ந்தஸ்தலம் என்று ராம்தீர்த்தம் என்னும் ஓரிடத்தைக் காண் பித்தார்கள். 1919-ல் பிரிட்டிஷ் ராஜ்யகவர்னர் ஒருவர் அட்டூழியம் செய்த "ஜலியன் வாலாபாக்" என்னும் படுகொலைக்களம் கண்டோம்.

அடுத்தபடியாக, அம்பாலாமார்க்கமாய் பாரதப்போர் நிகழ்ந்த குருக்ஷேத் திரம் சென்று சூரிய குண்டம் என்னும் புண்ணிய தீர்த்தத்தில் தீர்த்தமாடினோம். சிறு சிறு கோயில்கள் பல உள. புதிதாய்க் கட்டப்பட்டுள்ள கீதா பவனமும், பிர்லா மந்திரும் வெகு நேர்த்தியாக இருக்கின்றன. சாச்வத வட விருக்ஷத்தின் அடியில் நாங்கள் உட்கார்ந்து எதிரில் கீதை பிறந்த இடத்தை நோக்கி 'கீதா ஸார' உபந்நியாசம் நம் வித்வான் ஸ்வாமி வருஷிக்கக் கேட்டோம்.

## டில்லிமாநகர், புஷ்கரம்.

12-6-1967-ம் தேதி டெல்லிமாநகர் வந்து சேர்ந்தோம். பிர்லாமந்திர் ராஜ்காட், குதப்மினர், சிவப்புக்கோட்டை முதலியன பார்த்தோம். மறுநாள், ஜெய்ப்பூர் மார்க்கமாய் பஸ்ஸில் புஷ்கர க்ஷேத்திரத்தை அடைந்தோம். அங் குள்ள தடாகத்தில் எம்பெருமான் ஜலஸ்வரூபியாய் இருப்பதால் அதில் தீர்த்த மாடினோம். இவ்வூரில் நம் இரண்டுகலைக்கும் சிறிது போட்டி நிலவுகிறது. புரா தன தேவஸ்தானமான வேணுகோபாலக் கண்ணன் ஸந்நிதியில் தென்கலை

சம்பிரதாயம். நூதன வடகலை கோயிலில் வைகுண்டநாதன், லக்ஷிமி, ஆண்டாள் உடையவர் முதலானோர் ஏள்ளியிருக்கிறுர்கள்; இது ஐச்வரியம் நிரம்பிய ஆலயம்.

### நாதத்வாரா

புஷ்கரத்திலிருந்து நாங்கள் சென்ற க்ஷேத்ரம் நாதத்வாரம். இக்கோயில் ஸேவைக்கிரமங்கள் பிரமாதம். விடியற்காலை 6-மணிக்கு விச்வரூபதரிசனம் முதலாக இரண்டுமணிக்கொருதரம் திரை திறப்பதும் பத்து நிமிடங்களில் மூடுவதும், அவ்வப்போது கிரிதாரி வெவ்வேறு கோலத்தில் சேவை சாதிப்பதும் வெகு நேர்த்தி. ஸ்ரீகண்ணனின் பால்ய லீலையின் ஐதிஹ்யமோ! சாதாரணமாக நாம் காணக்கிடைக்காத அதிஅற்புத அலங்காரங்கள். முக்கியமாக மங்களஸேவையும் பார்க்கவேண்டியது. யாத்ரீகர்கள் எல்லாரும் தூரநின்று ஸேவை ஆகும்படி படிக்கட்டுகளும் பலகையால் மேடைகளும் சந்நிதி எதிரே போடப்பட்டு இருக்கின்றன. திருமஞ்சனத்திற்காக குடம் குடமாகப் பாலும் தயிரும் வருவதும் போவதும் போகத்துக்காக தளிகை சாமான்கள் குவிகிறதும் கணக்கிட இயலாது. இக்கோயிலுக்குள்ளேயே ஒருசிறு ஊரைப்பார்ப்பதுபோல் பலவிடங்களுக்குச் செல்ல வேண்டும். முக்கியமாக குங்குமப்பூ இழைப்பதற்காகத் தங்கக்கட்டியினுலேயே செய்துள்ள இயந்திரமும், பச்சைக் கற்பூரம் அறைப்பதற்காக வெள்ளிக்கட்டியாலேயே செய்துள்ள இயந்திரமும், நெய்க்கிணறுகளும் பார்க்கத் தவறலாகாது. வேறு எந்தக்கோவிலிலும் இப்படிப்பட்ட அபூர்வ வஸ்துக்கள் இல்லை எனலாம். இங்கிருந்து திரும்புகாலில் நேராக 400 மைல் தூரத்தை இராப்பகலாய் பஸ்ஸிலேயே பிரயாணம்செய்து முடித்து டில்லிக்குத் திரும்பி வந்துவிட்டோம்.

### மதுரா — ஆக்ரா — ப்ருந்தாவனம் — உஜ்ஜயினி.

16—6—1967-ம் தேதி மதுரை என்னும் மட்ட்ராவில் இறங்கி ஆக்ராவுக்குப் போய் தாஜ்மஹாலையும் பக்கத்தில் புதிதாக நிர்மாணிக்கப்பட்டு வரும் தயால்பாக் என்னும் ராதாக்ருஷ்ண ஸ்வாமியின் சமாதி மஹாலையும் பார்த்தோம். தயால் பாக்கில் உள்ள சிவப்புநிற கற்சிலை சித்ரங்களில் கண்டபின் தாஜ்மஹாலே இதற்கு இணை இல்லை எனத் தேறலாம். பிறகு பிருந்தாவனம் போகும் வழியில் ஸ்ரீ கண்ணபிரான் ஜன்மபூமி, பிர்லாமந்திரம், முதலியன கண்டோம். யமுனை நதியில் தீர்த்தமாடினேம். ஸ்ரீரங்கமன்னர் ஆண்டாளுடன் ஸேவை சாதிப்பது ஒரு தனியழகு. கோபுரமும் திருமண்காப்பும் இடையில் சில காலம் எங்களுக்குத் தென்படாதகுறை இங்குத் தீர்ந்தது. துவாரகாநாத் கோயில் மதுரா ரோட்டைச் சார்ந்தாப்போல் இருக்கிறது, மிக நெருக்கடியான இடம். ஆனுல், சந்நிதிக்குள் சென்றுவிட்டால் விசாலமான பிராகாரமும் மண்டபங்களும் காணலாம்.

பிறகு, ஜான்ஸி, போபால் மார்க்கமாக உஜ்ஜேனிப் பட்டணம் போனேம். லக்ஷிமி நாராயண மந்திர், விக்ரமாதித்தன் சிம்மாஸனம், ஜீர்ணேத்தாரணம் நடந்துகொண்டிருக்கும் பெரிய சிவாலயம் முதலியன கண்ணுற்றேம். இப்பக்கத்துக்கோயில்களில் பெரிய கம்பங்களில் அழகாக விளக்குகள் நூற்றுக் கணக்காய் அகலைப்போல் செதுக்கி இருப்பது ஓர் அதிசயம்.

## த்வாரகாக்ஷேத்திர யாத்திரை.

பிறகு, பஞ்சத்வாரகைகள் ஸேவிக்க விரும்பி முன்னம் டாகோர் துவாரகை என்ற க்ஷேத்திரம் சென்றோம். இத் துவாரகாநாதன் கோயில் மிகப் பெரியது. திரை திறந்ததும் முக்கியமானவர்களை இலவசடிக்கட்டுடன் பின்புறமாக அனுமதிப்பது தெரிந்து நாங்களும் சிலர் அவ்வழியில் சென்று படிக்கட்டேறி கண்ணன் கழலிணையைத் தொட்டு தலை சாய்த்து சேவிக்கும் பாக்யம் பெற்றோம். அப்போது வாமனாவதார திருக்கோல சாத்துப்படி வெகு திவ்யமாக இருந்தது. ஆங்கிலம் தெரிந்த பண்டா ஒருவர் எங்களுக்கு தேவஸ்தானம் முழுவதிலுமுள்ள புராதன விசேஷங்களைக் காண்பித்து விளக்கினார். அங்கிருந்து அஹமதாபாத் நகரை அடைந்து தர்மனாத் என்னும் அத்யாச்சரியமாய் வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ள தேவாலயத்தைச் சுற்றிவந்தோம். இங்குள்ள சிற்பக்கலைச் சித்ரம் உச்சஸ்தானம் அடைந்திருக்கிறது என்னலாம்போல் ஒவ்வொரு சிலையும் மண்டபமும் விமானமும், வாயிலும் செதுக்கப்பட்டு உள்ளன. மில் துணிகள் நயமாகவும் நல்லதாகவும் கிடைக்கின்றன. பஞ்சத் துவாரகைகளில் சிரேஷ்டமான பேடித் துவாரகைக்கு வீரங்காம் ஜங்ஷனில் இறங்கி சின்ன ரயிலில் ஏறி ராஜகோட் ஸ்டேஷனை அடைந்தோம். மேற்கு சமுத்திர கழிநீர் பரவி கோமதி நதியுடன் கலந்து ஓடும் கடலை பாய்மரப் படகில் கடந்து துவாரகைப்பட்டினம் சேர்ந்தோம். இக்கோயில் பல நூற்றாண்டுகளுக்கு முன்கட்டி யிருக்கவேண்டும். சமுத்திர அலைமோதி பல இடங்களில் ஊரே பாழடைந்திருக்கும் அடையாளங்கள் புலனாகின்றன. கோயிலுக்குள் சென்று பார்த்ததும் சன்னிதிகளும் விமானங்களும் வெகு ரம்யமாகக்காட்சியளித்தன. காலை 10-மணிக்கு திரை நீக்கினதும் துவாரகா நாதன் பேட்டி யளிக்கிறார். அர்ச்சகர் புல்லாங்குழலைக் களைந்து கீழே வைத்து விட்டு தங்கச் செங்கோலை கண்ணபிரான் பக்கலில் நிறுத்தியதும் இரு ஜவான்கள் துவாரபாலகர் பக்கமாய் வெள்ளித்தடி ஏந்திநின்று அர்ஜி என்று கூவுகிறார். ராஜாதி ராஜனைப் பேட்டிகாணும் அடியார்களுக்கு குறை ஏதேனும் உண்டோ என்று வினவும் தோரணை என்று அடியேனுக்குத் தோன்றியது. அக் கோவிலில் தமிழோ ஆங்கிலமோ தெரிந்தவர் எவரும் தென்படாததனால் அடியேனது அபிப்ராயம் சரிதானா என்று தெரிந்துகொள்ள இயலவில்லை. குறை வொன்றுமில்லாத கோவிந்தனைஸேவித்ததும் அடியேன்குறையும் தீர்ந்ததென்று திருப்திபெற்றேன்.

## நாஸிக் பஞ்சவடி.

பிறகு, ஸூரத் நகரில் இறங்கி தபதி நதியில் ஸ்நானம்செய்து நாஸிக் பட்டணத்துக்கு நேராகவந்து மேல் கோதாவரியில் தீர்த்தமாடினோம். ஸ்ரீராம லக்ஷ்மண சீதா விக்கிரகங்களுக்கு தனித்தனி ஸன்னிதிஅமைந்துள்ள அவ்வூர் கோவிலுக்குச்சென்று ஸேவித்தோம். பஞ்சவடி தீரத்திற்கும் போய் ஐந்து ஆல மரங்கள் வானளாவிநிற்கும் அழகையும் அவை பக்கங்களிலுள்ள அறைகளிலும், குகைக்குள்ளும் புகுந்து விசித்திரமான பிம்பங்களைப்பார்த்தோம். ஒவ்வொரு இடத்துக்கும் கட்டணம்நபருக்கு 2 அல்லது 5 பைசாதான். இராவண சந்நியாசி சீதா பிராட்டியிடம் பிக்ஷைகேட்பதுபோலவும் மற்றொரு அறையில் பொன்மானைத்துரத்திக்கொண்டு இராமர்செல்வதும் இலக்குவன் கோடிட்டுக்கிளம்புவதுமானகாட்சி.

## பாம்பேமகாநகரம்—பண்டரிபூர்

அங்கிருந்து பம்பாய் போய்ச்சேர்ந்தோம். இப்பட்டணத்தில் பனஸ்வாடி என்னும் சகரில் கீர்த்திமூர்த்தியான காதி அனந்தாச்சார்ய ஸ்வாமி கட்டுவித்த ஸ்ரீவெங்கடேச்வரர் கோவில் தென்தேசத்துப் பாணியிலுள்ளது. பிராகாரம் பூரா வும் நாலாப்பக்கமும் சலவைக்கல்லிலேயே புராண சித்திரங்களாகச் செதுக்கிப் பலவர்ணம் தீட்டியிருப்பது வெகு நேர்த்தியாய்உள்ளது. ஸ்ரீலக்ஷ்மிதேவி ஸ்ரீ ஆண்டாள் ஸந்நிதிகளும் ஆழ்வார் ஆசார்யாள் ஸந்நிதிகளும் சிரமப்படி அமைந்துள்ளன. ஏற்கெனவே இப்பட்டினத்து பிரதான தேவஸ்தானம் மஹா லக்ஷிமிஎன்னும் இடத்திலுள்ள மஹாலக்ஷிமிகோவில் சமுத்திர அலேகள் அடி பாகத்தில் இருபக்கங்களிலும் மோதிக்கொண்டிருக்கும் ஒரு சிறுகுன்றின்மீது ஸ்ரீ மஹாலக்ஷிமி கோயில் கொண்டிருக்கிறுர். ஒரு பக்கத்தில் சக்திஎன்னும் துர்க்காதேவிக்கும் மற்றெருபக்கத்தில் பார்வதி தேவிக்கும் ஸமபீடம் அமைந் துள்ளது. ஸேவார்த்திகள் நூற்றுக்கணக்கில் வந்துகொண்டேயிருக்கிறுர்கள். தவிர, இவ்வூரில் காணவேண்டிய அதிசயங்கள் பலஉள. முக்கியமானவை: கேட்வேஆப்இந்தியா, மலபார்மலேத்தோட்டம், மியூசியம், கடலோரக்கட்டிடங்கள்.

ஜூன் 30 ம் தேதி பம்பாயைவிட்டுக் கிளம்பி ஷோலாப்பூருக்குவந்திறங்கி பண்டரிபூர் க்ஷேத்திரத்தைக் கடைசியாக அடைந்தோம். சந்திரபாகா நதியில் தீர்த்தமாடி பண்டரிநாதன் கோயிலுக்குப்போனேம். முக்கிய சந்நிதிகளில் கூட்டம் அதிகமாய் இருந்தபோதிலும் ஸ்ரீவேணுகோபாலனேயும் ஸ்ரீருக்மிணித் தாயாரையும் ஸேவிக்கும்போது திருவடிகளேத் தொட்டு நம்கண்களில் ஒத்திக் கொள்ளும் பாக்யம் கிடைத்தது. பஜனேக்குப் பெயர்போன இக்கோயிலில் முன் போல பஜனே நடப்பதாகத் தெரியவில்லே. சக்குபாய் தேவிக்கு ஷி ஆற்றின் அக்கரையில் கோயில் உள்ளது. ஷோலாபூரிலிருந்து ஸ்வஸ்தான மடைந்தோம்.

எம்பெருமானின் ஐந்தாவது நிலேயான அர்ச்சாவதாரமும் அவன் உகந்த திவ்ய தேசங்களும் தென்னுட்டில் விசேஷமாகப் பல உளவாயினும் வட நாட்டிலும் நாம் அநுபவிக்கத்தக்க அநேக திவ்ய க்ஷேத்திரங்களும் தீர்த்தங்களும் மேற் கண்டபடி உளவாகையால் பக்தர்கள் அவ்விடங்களுக்கு கூடிய சீக்கிரத்தில் சென்று சேவித்து வருவது அவசியமென்று தோன்றிற்று.

"ஸ்ரீரங்கம் கரிசைலம் அஞ்ஜனகிரிம் தார்க்ஷ்யரத்ரி ஸிம்ஹாசலௌ
ஸ்ரீகூர்மம் புருஷோத்தமம்ச பதரீநாராயணம் நைமிசம்
ஸ்ரீமத்த்வாரவதீப்ரயாகமதுரா அயோத்யாகயா: புஷ்கரம்
ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முனி:

என்ற நித்யாநு ஸந்தேயஸூக்தியின்படி ஜகதாசார்யான எம்பெருமானுர் திவ்ய தேச யாத்திரை எழுந்தருளி யனுபவித்த அனுபவத்தில் ஏகதேசம் அவர் அவ தரித்த திவ்ய க்ஷேத்திரமான ஸ்ரீபெரும்பூதூரில் பிறக்கும் பாக்யம் பெற்ற அடியே னுக்கும் ஸ்ரீ ஜகதாசார்யன் நிர்ஹேதுகாநுக்ரஹத்தால் ஏற்பட்டமைக்கு அடி யேன் அன்னுர் திருவடிகளிலும் மற்ற பகவத் பாகவத ஆசார்யர்கள் திருவடிகளி லும் கரணத்ரயத்தாலும் பிரணுமத்தை ஸமர்ப்பித்து முடித்துக்கொள்ளுகிறேன்.

———

## திருநகரி· எம்பார் ஸ்ரீமதுபய வே. வேங்கடாசார்ய ஸ்வாமியின் பெருமை யநுபவம்

(எம்பார் V. ரெங்காச்சாரி (Pharmacist) எழுதியது.)

திருவாலி திருநகரியில் ரோஹிணி ஸ்வாமி யென்றே ப்ரஸித்தராய் விளங்கின ஸ்ரீமதுபய வே. எம்பார் வெங்கடாசாரியர் ஸ்வாமி ஜயஷு ஆவணிமீ ரோஹிணீ நக்ஷத்திரத்தில் திருவவதரித்து, பராபவஷு மாசிமீ 8௳ ஏகாதசியன்று திருநாடலங்கரித்தது ஸ்ரீ வைஷ்ணவ வுலகமறிந்ததே. "நர: பதிதகாயோபி யச:காயேந ஜீவதி" என்கிறபடியே நித்யவிபூதி சேர்ந்திருந்தாலும் கீர்த்தியெனும் மூர்த்தியோடே இவ்விபூதியிலேயே திகழா நின்ருர் என்னத்தக்க வீறுஉடையவராய்க் குணம்திகழ் கொண்டலான இந்த ஸ்வாமியின் ஞாபகார்த்தமான விண்ணப்பம் இது. ஸ்ரீஸ்வாமி பரமஸாத்விகராயும் ஸகலஸத்குண ஸம்பன்னராயும் மஹாஜ்ஞான நிதியாயும் திவ்ய தேஜஸ்வியாயு மெழுந்தருளி யிருந்தார்; இந்த ஸ்வாமி அடியேனுக்குப் பெரிய தகப்பனுராயும் ஆசார்யராயும் தேஹாத்மஉபய ஸம்பந்தத்துக்கும் ப்ராப்தராய் எழுந்தருளி யிருந்ததை அடியேனுடைய ஸுக்ருத விசேஷமாகவே கொள்ளுகிறேன்.

> "லக்ஷ்மீநாதாக்க்யஸிந்தௌ சடரிபுஜலத: ப்ராப்ய காருண்யநீரம்
> நாதாத்ராவப்யஷிஞ்சத் ததனு ரகுவராம்போஜசக்ஷுர்ஜராப்யாம்,
> கத்வா தாம் யாமுநாக்க்யாம் ஸரிதமத யதீந்த்ராக்ய பத்மாகரேந்த்ரம்
> ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி ஸததம் தேசிகேந்த்ர ப்ரமௌகை:"

ச்ரிய: பதியாகிற பெருங்கடலில் நம்மாழ்வாராகிற காளமேகம் படிந்து கருணையாகிற நீரைப் பருகி அதை ஸ்ரீமந் நாதமுனிகளாகிற மலையுச்சியில் மழையாகப் பெய்தது. அந்தகருணையாகிற மழை பிறகு உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிகளாகிற இரு அருவிகளால் ஆளவந்தாராகிற நதியை அடைந்து எம்பெருமானுராகிற மிகப்பெரிய தாமரைத்தடாகத்தை நிறைத்து எழுபத்துநான்கு ஸிம்ஹாஸனுதிபதிகளாகிற எழுபத்துநான்கு மதகுகளாலே சேதனர்களாகிற பயிர்கள் (உஜ்ஜீவிக்கும்படி) எப்பொழுதும் பெருகுகிறது என்கிற கருத்துள்ள மேல்கண்ட ச்லோகத்தில் காணப்படும் மதகுகளில் முதல் மதகான எம்பார் திருவம்சத்தில் வந்துள்ள நம் ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவ ஸாம்ராஜ்ய ஸ்ரீயைப் பல ஆஸ்திகர்களுக்குப் பலஇடங்களில் ப்ரவசனம் செய்து ஓங்கித் தழைக்கச்செய்தவர்.

ஸ்ரீ மணவாளமாமுனிகள் இவ்விருள்மண்டிய உலகில் நமக்குக் கைவிளக்காக உதவும் உபதேசரத்தினமாலையை நம்பால் கருணைகூர்ந்து ப்ரஸாதித்தருளியிருக்கிருர். அதில், "பூருவாசார்யர்கள் போதம் அனுட்டானங்கள், கூறுவார் வார்த்தைகளைக் கொண்டுநீர் தேறி, இருள்தருமா ஞாலத்தே இன்பமுற்று வாழும், தெருள்தருமா தேசிகனைச் சேர்ந்து" என்கிற திவ்ய ஸூக்திப்படி நம் எல்லோருக்கும் தெருள்தருமா தேசிகனுகவும், எம்பெருமானுர் தரிசனமும், அவர் திருவடிகளுமே நம் எல்லோருக்கும் தஞ்சம் என்றும் உபதேசித்து நமக்கெல்லாம் நல்வாழ்வு நல்கியருளினவர் எம்பார் திருவம்சத்தில் அவதரித்த ஸ்ரீ. உ. வே. எம்பார் வெங்கடாசாரியார் ஸ்வாமியே யாவர்.

எப்பொழுதும் எல்லா நிலைமைகளிலும் இன்முகம் காட்டிப் புன்முறுவல் பூத்துப் பேசும் இயல்பு இவருடைய ஏகபோக உரிமையான சொத்து. ஸ்வாமி பசி உணர்வே இல்லாமல் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியுடன் சம்பாஷித்த வண்ணம் காலம் போகிறதையும் உணராமல் அவ்வனுபவத்திலேயே நாட்டமாய் ஈடுபடுவதும் ஸ்வாமிக்கு உடன் பிறந்த இயல்பாகவே எல்லோரும் கூறுவர்.

ஸ்ரீமத் பகவத்கீதை, பகவத் விஷயம், ஸ்ரீபாஷ்யம், ஸ்ரீராமாயணம் ஸ்ரீவசன பூஷணம், முமுக்ஷுப்படி, ஆசார்யஹ்ருதயம், தத்வத்ரயம், திருப்பாவை, திவ்ய ப்ரபந்தங்கள் இவையாவும் பூர்ணமாக ஸ்வாமியிடம் ஸேவிக்க பாக்யம் பெற்ற மஹா பாக்யசாலிகளும், பாகவதோத்தமர்களும் பலர் இன்றும் உளர். பாகவதர்களில் "குழலைவென்ற குளிர்வாயினராகிச் சாதுகோட்டியுள் கொள்ளப்படுவாரே" என்கிற திருமுகத்தின்படி ஸாதுகோஷ்டியுட் புகுந்திருக்கிற சில முக்யஸ்தர்களைக் குறிப்பிடுகிறேன். ஸ்ரீமான் நாராயணசாமி ரெட்டியார்–அஞ்சுருவர்தலை, குற்றுலம். (2) ராமகிருஷ்ண ரெட்டியார், கூடுவளி, - திருவடிசம்பந்தி). (3) ஆளவந்தார் ரெட்டியார் வடமூர். (4) ஸ்ரீனிவாஸ ரெட்டியார்–தர்க்காஸ்து, ஆத்துக்குடி. (5) கோபால் சாமி பிள்ளை–கொண்டத்தூர். (6) கோவிந்தசாமி பிள்ளை–நாராயண மங்கலம். (7) (பொன்னுச்சி) ஆண்டாளாச்சியார்–ஸ்ரீரங்கம்...ஸ்வாமி பரமபதிக்கும் அந்தக்ஷண பர்யந்தம் தூய நல்வஸ்த்திரமும் ஸத்வகுணமே குடிகொண்ட எழில் மிகுதோற்றமும் கொண்டு, இன்மொழியுடனும் எழுந்தருளி யிருந்தார். ஸ்வாமி நித்யவாஸமாக எழுந்தருளி யிருந்த திவ்ய தேசம் திருநகரியே, திருமங்கைமன்னன் அவதார ஸ்தலமும் இதுவே. திருமங்கையாழ்வாரின் பரிபூர்ண கடாக்ஷமும் பெற்றவரே நம் ஸ்வாமி என்பதற்கு இவரால் ஆழ்வார் கொண்ட கைங்கர்யங்களே சான்றாகும்.

"பரீவாதேஷு யே மூகா: பதிராச் ச பரோக்திஷு,
பரரந்த்ரேஷு ஜாத்யந்தா: ஸ்தைர் ஜிதம் புவனத்ரயம்"

பிறரைத் தூற்றுவதில் ஊமைகளாகவும், பிறர்செய்யும் தூற்றைக் கேளாமையில் செவிடர்களாவும், பிறர் குறைகளைக் காண்பதில் பிறவிக் குருடர்களாதவும் இருப்பவர்கள் மூவுலகையும் வெல்கின்றனர் என்பதான இந்த ச்லோகப்படி ஸ்வாமி வாழ்க்கையில் அனுஷ்டித்துக் காண்பித்தார் என்பது எல்லோரும் ஒப்புக் கொள்கிற விஷயம். க்ஷமை, ஸௌலப்யம் ஆர்ஜவம் முதலிய திருக்கல்யாண குணங்கள் நிறைந்த மஹநீயரே நம் ஸ்வாமி. "ஞானம் அனுட்டானமிவை நன்றாகவே உடைய னாகுருவை அடைந்தக்கால்—மாநிலத்தீர். தேனார் கமலத்திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தம் தரும்" என்று பெரிய ஜீயர் அருளிச் செய்ததற்கு ஒப்ப ஸ்ரீ ஸ்வாமி எழுந்தருளி யிருந்தார் என்றால் இது மிகையாகாது.

ஸ்வாமி வைபவ விஷயமாக விண்ணப்பிக்க நினைக்கும்போது—ஸ்வாமிக்கு ஸகாக்களாகவும், ஸ்வாமியிடம் அதிக வாத்ஸல்யங்கொண்டு பரஸ்பர ப்ரீதியுடனுமிருக்கிற ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியே நம் நெஞ்சில் தோற்றுகிறது. அந்த ஸ்ரீ வைஷ்ணவ மஹநீயர்களை இதுசமயம் நெஞ்சார நினைப்பது ப்ராப்தம். இவர்களால் ஸ்ரீ வைஷ்ணவ உலகுக்கு விளைகிற மஹோபகாரம் அபரிமிதமாதலால்

அவர்களில் முக்யஸ்த்தர்களான வித்வான்களின் திவ்ய நாமங்களைப் பேசி உகப்போம். ஸ்வாமியின் திருவுள்ளத்துக்கும் இது மிக்க உகப்பாகும்.

1. பூர்வாச்ரமத்தில் ஸாது ராமானுஜாச்சாரியார் ஸ்வாமி என்ற திருநாமத்துடனிருந்து இப்பொழுது உத்தமாச்ரமியாய் திருமலை திருப்பதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பெரிய ஜீயர் ஸ்வாமியாய் எழுந்தருளி யிருக்கிறவர்.
2. ஸ்ரீ. உ. வே. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார்ஸ்வாமி, காஞ்சி.
3. ஸ்ரீ. உ. வே. தி. அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமி, ,,
4. ஸ்ரீ. உ. வே. சோளஸிம்மபுரம் ப்ரதிவாதி பயங்கரம் அனந்தாசாரியர் ஸ்வாமி.
5. ஸ்ரீ. உ. வே. அஷ்டகோத்ரம் வெங்கடாச்சாரியார் ஸ்வாமி, சித்ரகூடம்.
6. ஸ்ரீ. உ. வே. எம்பார் வட்டமணி ஸ்ரீநிவாஸாச்சாரியார் ஸ்வாமி, திருநகரி.
7. ஸ்ரீ. உ. வே. எம்பார் (பாகவதர்) விஜயராகவர்ச்சாரியார் ஸ்வாமி, ஸ்ரீரங்கம்.
8. ஸ்ரீ. உ. வே. ஆழ்வார்திருநகரி இளையவில்லி, சட்கோபாச்சாரியார் ஸ்வாமி.
9. ஸ்ரீ. உ. வே. காரப்பங்காடு வெங்கடாசாரியார் ஸ்வாமி, மதராஸ்.
10. ஸ்ரீ. உ. வே. அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம் ஸ்வாமி, ஸ்ரீரங்கம்.
11. ஸ்ரீ. உ. வே. வேளுக்குடி வரதாச்சாரியார் ஸ்வாமி, மதராஸ்.
12. ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் பாஷ்யாச்சாரியார் ஸ்வாமி, மதராஸ்.
13. ஸ்ரீ. உ. வே. திருநாங்கூர் ஆ. அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமி, பரோடா.
14. ஸ்ரீ. உ. வே. திருமலை அனந்தாண் பிள்ளை, கபிஸ்தலம் கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமி, ஸ்ரீரங்கம். மற்றும் பலருமுளர்.

இவர்கள் எல்லோருடைய திருவடிகளையும் மனதால் பற்றிக்கொண்டு அடியேனை க்ருதார்த்தனுக்க குளிரக்கடாக்ஷித்தருளி வாசக தோஷங்களை க்ஷமித்தருளி அடியேனை அனுக்ரஹிக்க வேணுமாய் ப்ரார்த்தித்துக்கொண்டு அடியேன் விண்ணப்பத்தை முடித்துக்கொள்கிறேன்.

சீர்காழி,
14—8—67.

அடியேன் ராமாநுஜ தாஸன்,
எம்பார் ரெங்நாச்சாரிய தாஸன்.

———

## நினைவுக்குவருவன நவிலக் கேளீர்—P. B. A.

அன்பர்களே! மேலேகண்ட மகுடமிட்டு மாதந்தோறும் சிலவிஷயங்களை யெழுதிவர உத்தேசித்திருக்கிறேன். என்னுடைய வாழ்நாளில் நிகழ்ந்த அதிசய மான பழைய விஷயங்கள் பலவும் அடிக்கடி நினைவுக்கு வருகின்றன. அவற்றை ப்ராஸங்கிகமாக அடியேன் உபந்யாஸங்களில் சொல்லுவதுண்டு. அவை யேடு பட்டிருக்கவேணுமென்கிற ஆசையினுல் இந்தவுத்தேசங்கொண்டேன். கீழே ஸ்ரீ உ. வே. அட்வகேட் அனந்தாசார்ய ஸ்வாமியின் வடநாட்டுத் திருப்பதியாத் திரை வியாஸத்தைப் பார்த்தபோது நினைவுக்குவந்த சில விஷயங்களை முதன்முத லாக ஈண்டெழுதுகின்றேன்.

பதரிகாச்ரமத்திற்கு மூன்றுவிசை சென்றிருக்கிறேனென்று தெரிவித்தேன். இரண்டாந்தடவை சென்றபோது கீர்த்திநகர்வரைக்குந்தான் பஸ்போக்குவரத்து இருந்தது. கீர்த்திநகரென்பது தேவப்ரயாகையிலிருந்து 15 or 20 மைலுக்கு உட்பட்டதென்று ஞாபகம். அங்கிருந்து மூன்றுமைல் தூரத்தில் ஸ்ரீநகர் என்பது. காச்மீரத்திலுள்ள ஸ்ரீநகர் அன்று இது. வதரிவழியிலுள்ள ஸ்ரீநகர் இது. இங் கிருந்து தண்டிகை ஏற்பாடு செய்துகொண்டுபோய் வதரி ஸேவித்துத் திரும்பி ஸ்ரீநகர்வந்து சேர்ந்து தண்டிகையை விட்டிட்டு இரவு அங்கே சயனங்கொண்டி ருந்து பின்மாலை புறப்பட்டுக் கீர்த்திநகர் வந்து சேர்ந்தோம். அங்கே பஸ் தயார்ராயிருக்குமென்றும் அதிலேறி ஹ்ருஷீகேசம் போய்ச்சேர்ந்துவிடலாமென் றும் எண்ணிவந்தோம். அப்போது இருபத்தைந்து நபர்கள் கூடவந்தவர்கள். தேவப்ரயாகை தான் *கண்டமென்னுங்கடிநகரே* என்று பெரியாழ்வார் பாடின திவ்யதேசம். அதை நாங்கள் முதலில் புறப்படும்போதே ஸேவித்தானபடியால் இப்போது நேரே ஹ்ருஷீகேசம் சேர்வதென்று நிச்சயித்திருந்தோம். கீர்த்தி நகர்வந்து சேர்ந்தபிறகு அங்கிருந்து தேவப்ரயாகைவரையில் வழியில் பெரும் பாலும் மலைசரிந்துவிழுந்து பஸ்போக்குவரத்து நின்றுவிட்டதென்றும், மனிதர்கள் கால் நடையாகப்போவதும் அஸாத்யமென்றும் இந்தவழி செப்பனிடுவதற்கு ஒரு வாரத்திற்கு மேலாகுமென்றும் க்ஷேமஸமாசாரம் சொல்லிவிட்டார்கள். மேல்செய் வதொன்றும் தோன்ருது திகைத்திருந்தவளவில், கீர்த்தி நகரிலிருந்து தேவப்ர யாகைக்கு மற்றொரு சுற்றுப்பாதை நன்ருயிருப்பதாகவும் அங்கிருந்து மொத்தம் 36 மைல் என்றும், 18-வது மைலில் ஒருசட்டியிருப்பதாகவும். அங்கே தளிகை செய்து புஜித்து விச்ரமித்து தேவப்ரயாகை போகலாமென்றும் அங்குள்ளார் தெரி வித்தார்கள். அப்போது காலை 6 மணி. 'வழி மிகநல்லவழிதான், கண்ணைமூடிக் கொண்டுபோகலாம்' என்று சொல்லிவிட்டார்கள். நடக்கவல்லவர்கள் சரசர வென்று நடந்துசெல்லத் தொடங்கிவிட்டார்கள். நானும் என் தமக்கையும் வாஹ னம்தேடி நின்ருேம். அங்கே மஹதா ப்ரயாஸேந இரண்டு குதிரைகள் கிடைத் தன. கோவேறு கழுதைகளைத்தான் அங்கே குதிரையென்பது. ஒன்றில் தமக்கை யும், மற்றொன்றில் நானும் ஏறிப்போவதாக நிச்சயித்து ஏறிவிட்டோம், தமக்கை

சுகமாகப் பயணம்செய்கிருள். எனக்கோ ஒருபர்லாங்குகூட அதில் செல்லமுடியா மற்போக, இறங்கிவிட்டேன், துரகத்தையும் திருப்பிவிட்டேன். 36 மைல் என்பதை நினைத்து நினைத்து ஏங்குகிறேன். நான் குதிரைமேல் வருவதாகவே நினைத்து. முன்சென்றவர்களெல்லாரும் நில்லாது சென்றுவிட்டார்கள். என்செய்வேன்? ஒன்றும்தோன்றவில்லை. *கச்சதாம் தூரமத்வாநம் த்ருஷ்ணமூர்ச்சித சேதஸாம், பாதேயம் புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதம்* என்னும் சுலோகம் நினைவுக்கு வந்தது. மற்ருென்றும் நினைவுக்கு வந்தது. (அதாவது) வேதாத்யயனம்பண்ணும் போது சிலஸமயம் சோர்வு சோம்பலால் வாளாவிருப்பேன். அப்போது உபாத் யாயரான மாம்பள்ளம்ஸ்வாமி "அழுதாலும் பிள்ளையை அவளே பெற்ருக வேணும்" என்று புன்முறுவலோடு ஸாதிப்பர். அவர்ஜநீயமானதற்குப் பின் வாங்கிப் பயனில்லையென்பது கருத்து. இஃது உண்மைதானே. 36 மைல் என்னும் போதே உள்ளசக்தியும் உள்ளொடுங்குகின்றது. ஏகாகியாய் நடந்து செல்ல ஆரம்பித்துவிட்டேன். அன்று திருவாடிப்பூர மஹோத்ஸவத் தொடக்கநாள். நாச்சியார் திருமொழியநுஸந்தானம் செய்துகொண்டே நடப்பதென்று முடிவு செய்து தனியன்களநுஸந்தித்துத் திருப்பல்லாண்டு தொடங்கினேன். அரையர் களின் தேவகானத்தில் ஸேவிக்க ஸங்கல்பித்து ஒவ்வொரு பாசுரத்தையும் இரு முறை ஸேவிப்பதாகவும் ஸங்கல்பித்து திருப்பல்லாண்டு திருப்பாவைகளை ஏழா வது மைலில் முடித்து நாச்சியார் திருமொழி தொடங்கினேன்.* மரங்களு மிரங்கும் வகை மணிவண்ணவோவென்று கூவுமால் * என்ற திருவாய்மொழிப் பாசுரத் திற்கும் மேற்பட * நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய, மாலுக்கும் ஏரார்விசும்பி விருப்பரிதா-ஆர்ாதகாதலுடன் கூப்பிட்ட காரிமாறன் * என்ற (59) திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரத்தின்படி ஆகாசவாஸிகளுக்கும் கேட்கும்படி அநுஸந்தித் துப் போகின்றேன். அப்போது வயது ஐம்பத்தொன்பது. வழி இன்னமும் நெடு காதா என்கிற எண்ணமுண்டாயிற்றேயொழிய சேரவேண்டுமிடம் ஸமீபிக்க வேணுமென்கிற எண்ணம் தோன்றவேயில்லை. வழியோ வெகு ஆச்சரியமானது. விசாலமான பாதை. * உரம்பெற்ற மலர்க்கமலம் உலகளந்த சேவடிபோலுயர்ந்து காட்ட, வரம்புற்ற கதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத் தலைவணக்கும் தண்ணரங் கமே * என்கிற பெரியாழ்வார் திருமொழியை நினைவூட்டும் ஸந்நிவேசங்கள் அடுத்தடுத்துக் காண்கின்றன. இந்தவழியிலேயே மீண்டு மீண்டும் போவதும் வருவதுமாக இருந்து காலங்கழிக்கலாமே! என்றும் தோன்றிவிட்டது. அந்த ஆனந்தத்தை என்சொல்லுவேன்!

தைவாதீனமாகச் சில உத்தராதியாத்ரிகள் பின்னுல் வருவதைக் கண்டேன். அவர்களில் சிலர் என்னைக்கடந்து கனவேகமாகச் செல்லுகிருர்கள். சிலர் என் னுடைய அநுஸந்தானத்தைக் கேட்டுக்கொண்டு என்ைேடு கூடவே வருகிருர்கள். அவர்கள் தங்களை தோதாத்ரிஸ்வாமி சிஷ்யர்களென்று சொல்லிக்கொண்டார்கள். பேரின்ப வெள்ளமாக வழிநடை செல்லுகின்றது. அன்பர்களே! இந்த நிகழ்ச்சியை நான் எழுதத்தொடங்கினதன் காரணம் இதோ எழுதப்போகிற அற்புதமான வொரு விஷயத்தைத் தெரிவிப்பதேயாம். ரோமாஞ்ச கவசித காத்ரனுய் அதை

யெழுதுகின்றேன். சென்றுகொண்டே யிருக்கையில் ரமணீயமான வொரு நீரருவி வீழ்ச்சி. அங்கே சில ஸ்மார்த்த ப்ராஹ்மணர்கள் கூடியிருக்கக் கண்டேன். ப்ரேத க்ருத்யமொன்று நடக்கிறது. என்ன நடத்துகிறார்களென்று சற்று நின்று கவனித்தேன். நமது நாட்டில் உபாத்யாயர்கள் பண்ணிவைக்கிற ரீதியிலேயே இதே மந்த்ரங்களைச் சொல்லியே புரோஹிதர் பண்ணிவைக்கிறார். அதைப் பார்க்கும்போது அடியேனடைந்த ஆச்சரியம் அப்ரமேயமானது. இதை நாலைந்து ஸந்தர்ப்பங்களில் அடியேன் உபந்யாஸங்களில் விஜ்ஞாபித்தவன்.

முன்னோர்களான மஹரிஷிகள் ஹவ்யகவ்ய ப்ரயோக ப்ரக்ரியைகளை எழுதி வைத்தார்களே யொழிய ஒவ்வொரு க்ருஹத்திலும் சென்று நீங்கள் இதை யனுஷ்டிக்கவேணும்; இப்படியனுஷ்டித்தேயாகவேண்டும்' என்று கட்டளையிட்டார்களல்லர். *ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா* என்ற பகவதாஜ்ஞை மூலைமுடுக்குகளிலும் எங்ஙனே செல்லா நின்றது! ராஜாஜ்ஞை என்கிறார்களே; அதைப்பெற்றவர்கள் 'இதோபார், மேலேபோய் இதை நாளைக்கே மாற்றிக்கொண்டு வருகிறேன் பார்' என்று அதிகாரியெதிரிலேயே உறுமுகிறார்கள். 'இதோ நான் மீறி நடக்கிறேன்; உன்னாலானது பார்த்துக்கொள்' என்று சொல்லத்துணிவையும் சில அட்வகேட்டுகள் கற்பிக்கிறார்கள்; நம்முடைய சாஸ்த்ர விதி நிஷேதங்கள் என்றைக்கு ஆரம்பமாயின! என்றைக்கு முடியப்போகின்றனவென்று ஒருவருடைய புத்திக்கேனும் எட்டக்கூடியதோ இது!......என்ற விஸ்மயத்துடனே மேலே வழி நடக்க ஆரம்பித்தேன். எனக்கு முன்னடிச் சென்றவர்கள் உத்தேச்ய ஸ்தலத்தை எப்போதோ சேர்ந்துவிட்டார்கள். தளிகையும் செய்து முடித்துவிட்டார்கள். மணி பன்னிரண்டாய்விட்டது. அதிசங்கையுமுண்டாகி விட்டதவர்களுக்கு. அப்போது எங்களோடுகூட யாத்திரை வந்திருந்தவனும், இப்போது திருப்பதி யூனிவர்ஸிடி இன்ஸ்டிட்யூட்டில் வாழ்பவனுமான ஸ்ரீமான் நியாயசிரோமணி. கிடாம்பி. ஸ்ரீநிவாஸவரதன் முன்னடியே உத்திஷ்டஸ்தலம் சேர்ந்திருந்து வெகுநாழிகை வரையில் நான் வந்து சேராமையினால் திடுக்கிட்டு எதிரேவந்து கொண்டிருந்தான். இருவரும் போய்ச் சேர்ந்தோம். அந்த சட்டிக்கெதிரே அருவி நீர்ப்பெருக்கின் அழகை வருணிக்க ஆதிசேஷனாலுமாகாது. இத்தகைய ஸ்தலங்களெல்லாம் காட்டில் நிலவாக ஆகிறதேயென்கிற பரிதாபமேமிக்கது. இது நிற்க.

இந்த இடம்வந்து சேரும்போது என்னுடைய நாச்சியார் திருமொழி யநுஸந்தானத்தில் ஏழாவது திருமொழியான *கருப்பூரம் நாறுமோ பதிகம் முடிவு பெற்றிருந்தது. போஜனமான பிறகு அவரவர்கள் தேவப்ரயாகை சேர இன்னும் 18 மைல் செல்லவேணுமே யென்று சொல்லிக்கொண்டே கிளம்பி விட்டார்கள். அங்கு வாஹன ஸௌகரியம் ஏதாவது ஏற்பட்டாலுங்கூட அதை விரும்பாதே நடந்து செல்லவே உத்ஸாஹங் கொண்டு எல்லாரையும் போகச் சொல்லிவிட்டு, காலைவிட்ட அநுஸந்தானமே துணையாக வெய்யில் தாழப் புறப்பட்டேன். *விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்* என்கிற மேகவிடுதூது பதிகம் தொடங்கினவுடனே சுற்றும் மேகங்கள் தென்பட்டது எனக்கு வியப்பாகத் தோன்றவில்லை. அடுந்த திருமொழி *சிந்துரச் செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும், இந்திரகோபங்களே யெழுந்தும் பரந்திட்டனவால்* என்று

தொடங்கிச் சொல்லிப்போகுமிடத்தில் இந்திரகோபமென்கிற பட்டுப்பூச்சிகள் பரந்திருந்தபடியைப் பார்த்தவென்னுல் ஆனந்தம் தாங்கமுடியவில்லை. இதனை எல்லாரும் நம்புவார்களென்று நான் நினைக்கவில்லை; அதனுலென்ன? ஆத்மானந்தத்திற்குக் குறையில்லையே. தேவப்ரயாகைக்கு இரண்டு மூன்று மைலுக்கு இப்பாலே ஸூர்யாஸ்தமயமாய் விட்டது. இருள்மூடித் திசைகளும் மறைந்து விட்டன. அப்போது பட்டிமேய்ந்தோர் பதிகம் அநுஸந்தானமாகிறது. ஆனுல் குரல் தழுத்துப்போய் உத்ஸாஹம் குறைகிறது. அஸ்யாமவஸ்த்தாயாம், முன்னுடிச் சென்று முன்னமே சேர்ந்திருந்தவர்கள் வாளாவிருக்ககில்லார்களே. இருவர் நால்வர் திருவிளக்கேந்தி எதிரே வந்து கொண்டிருக்கின்ருர்கள். *ஆயர்குல வேந்தனுகத்தாள் தென்புதுவை வேயர்பயந்த விளக்குத்தான் இங்ஙனே வடிவெடுத்து வருகின்றது போலும்! என்று நினைக்கலாயிற்று. அதற்கு முன்பு நடந்த மலைநாட்டுத் திருப்பதியாத்திரையில் திருமூழிக்களத்திற்குச் செல்லும் போது இருளில் வழி திகைந்து அலமருகின்ற சமயத்தில் கழனியிலுள்ள க்ருஷிஜீவிகள் மிடற்றெலி கேட்டுத் தங்களிடமிருந்த கைவிளக்கைத் தூக்கிக் காட்டின போது *முனியே! திருமூழிக்களத்து விளக்கே!* என்ற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியை நினைத்து உள்ளம் பூரித்தபடியை சென்ற பங்குனி விசாக மலரில் வெளியிட்டிருந்தேன். இதுவும் அத்தோடொத்தவொரு ஸந்நிவேசம். பிறகு தேவப்ரயாகை சேர்ந்து மேல் யாத்திரை இனிது நடைபெற்றது.

இந்த க்ஷேத்ரத்தில் மற்றெரு விசேஷமும் மற்றெரு கால் நிகழ்ந்ததை விஜ்ஞாபிக்கிறேன். மூன்று விசை நிகழ்ந்த அடியேனுடைய பதரீ யாத்திரையில் மேலே தெரிவித்த நிகழ்ச்சி இரண்டாவது தடவையான யாத்திரையிலாயது. மூன்ருவது யாத்திரை வேதபாராயணமும் அருளிச்செயல் ஸேவையும் கூடவே நடந்துவரும்படியாக உபயவேதவித்துக்களோடுங்கூட நடைபெற்றது. அப்போது தேவப்ரயாகைவந்து சேர்ந்தவுடனே அடியேனுக்கு விரேசன பாதையுண்டாகி மிகவும் சிரமப்பட நேர்ந்தது. "உடனே திரும்பி ஊர் சேர்ந்துவிடுவது நலம்" என்று உடனிருந்தவர்களனைவரும் உரைத்தனர். அடியேனும் அப்படியே முடிவு செய்திருந்தும் மனம் இசையவில்லை. அன்று அவ்விடத்தில் நடைபெற்ற திவ்ய ப்ரபந்தஸேவையில் திருவாய்மொழி பத்தாம்பத்து ஸேவிக்கிருர்கள் உடன்வந்த ஸ்வாமிகள். அதில் முதல் திருவாய்மொழியான திருமோகூர்ப் பதிகத்தில் *சுற்றி நாம் வலம் செய்ய நம்துயர் கெடுங் கடிதே* என்று ஸேவிக்கும் போது, கூட எழுந்தருளியிருந்தவரும் இன்றைக்கும் ஸேவ்வஸாதித்துக்கொண்டிருப்பவருமான ஸ்ரீமதுபயவே. கோயம்புத்தூர் பட்டர் ஸ்வாமி [வேதவ்யாஸ. திருமலை ஐயங்கார் ஸ்வாமி] "இப்பாசுரத்தைப் பன்முறையும் ஸேவித்தால் நல்லது; இதில் (துயர் கெடுங் கடிதே) என்று வருவதால் நம் அண்ணுவுக்கு உடனே துயர் தொலையும்" என்று அத்யாபகஸ்வாமிகளிடம் ஸாதிக்க அவர்களும் அப்படியே அடுத்தடுத்து ஸேவிக்கிருர்கள். அடியேனுக்கோ ஸேவிக்க சக்தியில்லை; ச்ரவணந்தான் பண்ணுகிறேன். ஸ்வாமிகள் உச்சஸ்வரத்தில் பன்முறையும் ஸேவிக்கும் பாசுரத்தைச் செவிகுளிரக் கேட்டுக் கொண்டிருந்ததன் பலனுக உடலில் சக்தியும் உள்ளத்தில் உத்ஸாஹமும் வளரத் தொடங்குகின்றது. அப்போது மாலை 4 மணி,

ஸேவித்த பாசுரத்தில் (துயர்கெடுங்கடிதே) என்பதற்குமுன் "சுற்றி நாம் வலஞ் செய்ய" என்றிருப்பதால் அந்த திவ்ய தேசத்தெம்பெருமான் ஸன்னிதியைச் சுற்றி வலஞ்செய்யவேணுமென்னுமாசை கிளர்ந்தது. ப்ரதக்ஷிணம் செய்வதற்கு மிக வாய்ப்பான ஸந்நிவேசமு முள்ள தங்கு. இந்த திவ்ய தேசத்தை மங்களா சாஸனம் செய்தருளினவர் பெரியாழ்வாரொருவரே. துணுக்கைப் பாடலன்று; இணையில்லாததொரு பதிகம். *தங்கையை மூக்கும் தமையனைத் தலையும்* என்று தொடங்குவது; *கங்கை கங்கையென்ற வாசகத்தாலே கடுவினை களைந்திட கிற்கும், கங்கையின் கரைமேல் கைதொழநின்ற கண்டமென்னுங் கடிநகரே* என்னும் பாசுரங்கள் கல்லுங் கரையும்படியானவை. அடுத்த இரண்டாம் பாசுரத் தில் *நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும் நாரணன் பாதத்துழாயும், கலந்திழிபுனலால் புகர்படுகங்கைக் கண்டமென்னுங் கடிநகரே* என்று அத்தலத் தில் அலகநந்தாவும் பாகீரதியும் ஸங்கமமாகிற ஸந்நிவேசத்தை ஆழ்வார் வருணித்திருப்பது ப்ரத்யக்ஷலக்ஷ்யமா யிரா நின்றதங்கு. இந்தத் திருமொழியை அரையர் கானத்தில் ஸேவித்துக் கொண்டே நூறு ப்ரதக்ஷிணம் பண்ணினேன். ஒவ்வொரு ப்ரதக்ஷிணத்திற்கும் ஒரு ஆவ்ருத்திமுடியும். பெருமாள் திருமுன்பே சாத்துவது, மறுபடியும் அங்கே தொடங்குவது. இப்படியாக நூறு பர்யாயம் குறையற நிகழ்ந்தது. *துயர்கெடுங்கடிதே* என்றதைக் கைமேல் கண்டேன். அடியேனுடைய வாழ்நாளில் நிகழ்ந்த வியப்புகளில் இதுவொன்று என்பதற்கில்லை; இது தலையானது என்னவேணும். முன்னம் வெளியிட்டுள்ள வதரிவணங்கிய வரலாறு வியாஸம் எழுதியுபகரித்தவரான ஸ்ரீமதுபயவே. சென்னை அட்வகேட் அனந்தாசாரியர் ஸ்வாமியை 20—8—67ல் ஒரு விவாஹ ஸந்தர்ப்பத்தில் சிறிது போது ஸந்தித்து வார்த்தையாட நேர்ந்த காலத்தில் இந்நிகழ்ச்சியைச் சுருங்க விஜ்ஞாபித்து "இந்த திவ்ய தேசத்தை ஸேவிக்க நேராமல் போயிற்றே தேவரீர்க்கு" என்று என் மனக்குறையைத் தெரிவித்தேன். பஸ் பயணத்தில் ஸௌகரியம் வாய்க்கவில்லையென்று ஸாதித்தார்.

இதற்கும்மேல் ஒரு அற்புதம் கேளீர். மேலே கண்ட நிகழ்ச்சியை அடியேன் 26—8—67 தேவப்பெருமாளுடைய பவித்ரோத்ஸவ பூர்ணாஹுதியன்று மாலை மாடவீதிப் புறப்பாட்டுக்காக முன்னம்விடைகொண்டு நம்பிள்ளை ஸன்னிதியில் இருந்து கொண்டு எழுதி முடிக்கும்தருவாயில் ஸ்ரீமான் உவே. A. K சடகோபா சாரியர் [Bombayயில் வாழ்ந்தவர், தற்காலம் அம்பத்தூரில் வாழ்பவர்] அடியே னிடம் வந்தார். அவர்க்கு இதை வாசித்துக்காட்டித் தலைக்கட்டும்போது பெருமாள் புறப்பட்டாயிற்றென்று செய்திதெரிந்து ஸன்னிதிக்கு ஓடினோம். அன்று இயல் தொடக்கம் பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து *கதிராயிரமிரவி. நான்கு மாடவீதிகளும் எழுந்தருளி ஸன்னிதி சேர்ந்து இயல் சாத்தும்போது கண்டமென்னுங் கடிநகர்த் திருமொழிதான் சாத்தியாயிற்று. கோஷ்டியில் உடனிருந்து அநுபவித்துவந்த மேலேகுறிப்பிட்ட சடகோபாசாரியரால் ஆனந்தம் தாங்க முடியவில்லை. அடியேனைச் சந்தித்து வாய்வெருவுகிறார். இயல் சாத்தும் போது எதிரே நிற்பவரான ஸ்ரீமதுபயவே. ஸஹ்ருதய ரஸிகமணி D. ராமஸ்வாமி ஐயங்கார் *பொங்கொலி கங்கைக் கரைமலி கண்டத்துறை புருடோத்தமனடிமேல்,

வெங்கலி நலியா வில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன் விருப்புற்று, தங்கியவன்பால் செய்தமிழ்மாலை தங்கிய நாவுடையார்க்கு, கங்கையில் திருமால் கழலிணைக்கீழே குளித்திருந்த கணக்காமே.* என்கிற பாசுரம் உச்சத்வநியில் ஸேவிக்கப்படுவதைச் செவிசாத்திக் கண்கள் அசும்பொழுக நின்றபடியைக் கண்டேன். அன்றிரவு முழுவதும் அடியேனுடைய சிந்தனையில் ''கங்கையில் திருமால் கழலிணைக் கீழே குளித்திருந்த கணக்காமே'' என்கிற இந்த ஓரடியே உலவிற்று. இப்படிப்பட்ட பலச்ருதிபாசுரம் வேறு காண்பதுண்டோ? 'குளித்திருந்த' என்றுதான் ஆழ்வார் ஸாதித்தது. சாத்துப் பாசுரமானவிது இருமுறை ஸேவிக்கப்படுவதல்லவா? ஒரு முறையில் 'குளித்திருந்த' என்றோதி மறுமுறையில் 'களித்திருந்த' என்றோதுவேனடியேன். மோனையின்பத்திற்குச் சேர்வதோடு அடியேனுடைய கங்குகரையற்ற களிப்புக்கு மிகமிகச் சேர்ந்திருப்பதன்றோ ?

இவ்வநுபவத்திற்கு ஆஸ்பதமான யாத்திரையில் அடியேன் ஹரித்வாரத்திலிருந்து தேவப்ரயாகைக்குப் புறப்படவிருக்கையில், இப்போது நம் ஆண்டவனுக ஸேவைஸாதிக்கிற திருக்குடந்தை கண்ணன்ஸ்வாமி ஹ்ருஷீகேசத்திலிருந்து அவ்விடம் வந்து சேர்ந்து ''ராத்ரிரேவ வ்யரம்ஸீத்'' என்னும்படியாக வார்த்தையாடியிருக்கப்பெற்ற களிப்பையும் விஜ்ஞாபித்துத் தலைக்கட்டினேனிக் கட்டுரையை.

---

## ஆனந்தமில்லை—ஆச்சரியமேயுள்ளது. P. B. A.

தமிழ் தினசரிப்பத்திரிகைகளில் '' அறிஞர்களுக்கு கௌரவ விருது '' என்ற தலைப்பின்கீழும், ஆங்கிலப் பத்திரிகைகளில் ''Certificates of Honour to Scholars'' என்ற தலைப்பின்கீழும் வெளிவந்திருக்கின்ற (15.8-67) சுதந்திரதினத்து ராஷ்ட்ரபதி வித்வத்ஸம்மானச் செய்தியையறிந்த ஆப்தர்கள் அனைவரும் அன்றுமுதலாக நமக்குத் தந்திகளும் தபால்களும் அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள். நாம் மாதந்தோறும் நான்கு பாஷைப் பத்திரிகைகளை வெளியிட்டு வருவதனால் நமக்கு ஆப்தர்களென்று சொல்லக்கூடியவர்கள் நாற்றிசையிலும் ஆயிரக்கணக்கில் தேறுவர்கள். அடிக்கடி கடிதப்போக்குவரத்துள்ள பரமாப்தர்கள் பல நூற்றுக்கணக்கில் தேறுவர்கள். இவர்களில் ஒருவர் தப்பாமல் பெரும்பான்மையோர் தங்கள் த்ருப்தியைத் தெரிவிக்கவிரும்பி தந்திகளை சென்றவாரம்வரையில் அனுப்பிவந்தார்கள். தபால்களை இன்னமும் அனுப்பிக்கொண்டே யிருக்கிறார்கள். முக்கியமாகச் சில பெரியார்களுக்கு பதிலெழுதாமலிருக்க முடியவில்லை. எழுதியிருக்கிறோம். என்ன எழுதினோமென்பதை இதில் ஸாரமாகத் தெரிவிப்போம் மேலே. இந்த வியாஸத்திற்கு " ஆனந்தமில்லை—ஆச்சரியமேயுள்ளது " என்று மகுடமிட்டிருக்கிறோம். என்ன ஆச்சரியமென்பதை முன்னம் தெரிவிப்போம். கடிதங்களெழுதினவர்கள் ஒருவரையொருவர் சந்திக்காமல் பலவேறு இடங்களிலிருந்தே யெழுதியிருக்கிறார்கள். ஆனாலும் அக்கடிதங்களைப் பார்க்கும்போது ஒவ்வொருவரும் இன்னவிதமாக நாமெழுதவேணுமென்று ஸங்கேதம் செய்துகொண்டு எழுதினதாகவே எண்ண வேண்டியதாகிறது. எழுதும் சப்தங்களில் ஸ்வல்ப பேதமிருக்குமேயொழிய அர்த்தத்தில் அணுவளவும் வாசி கிடையாதென்பதுதான் மிக ஆச்சரியம்.

7

"ராஷ்ட்ரபதியின் வித்வத்பஹுமானம் உங்களுக்குக்கிடைத்திருக்கிற செய்தியறிந்து ஸந்தோஷிக்கிறோம். ஆனால் இதனால் உங்களுக்குப் புதிதாக ஒரு கௌரவம் வந்துவிட்டதாக நினைப்பதற்கில்லை. ஒருவரும் நினைக்கவும் மாட்டார்கள். என்றைக்கோ செய்திருக்கவேண்டிய இந்த பஹுமானத்தை அரசாங்கம் இப்போதுதான் செய்திருக்கிற தென்பதைப்பற்றி அரசாங்கம் அனுதாபங் கொள்ளாமலிராது. உண்மையில் அரசாங்கம் தன்னைத் தான் பெருமைப்படுத்திக்கொண்டதாகவே உலகம் நினைக்குமேயொழிய உங்களுக்கொரு புதியபெருமையை யுண்டாக்கினதாக ஒருவரும் நினையார். அரசாங்கம் தாமதித்தாவது தன்கடமையை யுணர்ந்துகொண்டதுபற்றி மட்டுமே சந்தோஷிக்க வேண்டியிருக்கிறது."

என்பதுதான் நமக்குக் கிடைத்திருக்கிற-கிடைத்துவருகிற ஒவ்வொருவருடைய தந்தியிலும் கடிதத்திலுமுள்ளது. வடமொழி தென்மொழி தெலுங்கு ஆங்கிலம் முதலிய பாஷைகளில் நமக்குக்கிடைத்திருக்கிற பலபல கடிதங்களில் பாஷா பேதமும் ஸ்வல்பசப்தபேதமுமே யொழிய விவக்ஷித விஷயத்தில் அணுவளவும் பேதமில்லையென்பது நமக்கு அபரிமிதமான ஆச்சரியத்தை விளைக்கிறது; சப்த பேதங்கூட இல்லாமல் பலகடிதங்கள் கிடைத்திருப்பது பெருத்த ஆச்சரியமே.

இந்த சந்தர்ப்பத்தில் உண்மையாக நாம் தெரிவிப்பது கேளீர். உலகிற் பிறந்த ஒவ்வொருவரும் தாங்கள் பெருமைபெற விரும்புவது இயல்பு. எல்லாரும் நம்மை மதிக்கப் பெறவேணுமென்றும், நமக்குள்ள பெருமையை எல்லாரும் பாராட்டவேணுமென்றும் ஆசைப்படாதார் அநேகமாக இருக்கமாட்டார்களென்று திடமாகச் சொல்லலாம். இந்த ஆசை நமக்குமுள்ள தென்றால் இது தவறாகாது. 'தோன்றிற் புகழொடு தோன்றுக, அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று" என்று குறளாசிரியர் கூறியிருப்பதால் புகழ்பெற விரும்புவது ப்ராப்தமேயாகு மன்றோ. நாம் க்க்யாதிலாபபூஜா விமுகர்களல்லோமே. அந்தப்புகழ் இப்போது நமக்குப் புதிதாகக் கிடைக்கவில்லை யென்பதை உலகம் முழுவதும் ஒருமிட்டுச் சொல்லுவதனால் இப்போது நமக்குப் புதிதாக எவ்விதமான ஆனந்தமுமில்லை யென்பதையும் நாம் தெரிவியாமலே உலகம் தெரிந்து கொண்டிருக்கிறது. ஒரு ஸமயம் சக்ரவர்த்தி திருமகனைப்பற்றி இராவணன் *சத்ரோ: ப்ரக்க்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:* என்று சொன்னதை நம் ஆசாரியர்கள் அடிக்கடி யெடுத்துக் காட்டக் காண்கிறோம். இந்த அடைவில் உகவாதாரும் மதிக்கப்பெற்றிருக்கிறோ மென்பதை அறியாதாருண்டோ? ஆனால் அது வொரு பொருளன்று. பலவிதங்களிலும் ப்ரக்க்யாதர்களான பல மஹான்கள் அஸூயா மாத்ஸர்யாதிகளை அறவே யகற்றி நம்மிடத்தில் அந்தரங்க ஸாக்ஷிகமான உகப்பை எண்ணிறந்த வியாஸங்களினாலும் உபந்யாஸங்களினாலும் காட்டியுள்ளார்கள்—காட்டி வருகிறார்கள் என்பதுபற்றியே நாம் உண்மையாக ஆனந்தமடைந்து வருகிறோம்.

---

"ஸ்ரீ பாஷ்யாதிகரண மெழுபத்தாறு" என்கிற வியாஸசேஷம் அடுத்த இதழிலிருந்து தொடர்ந்து வெளிவரும்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர்திருவடிகளே சரணம்.



# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை.

நிகழும் பிலவங்க ஸம்வத்ஸரம் பங்குனித்திங்களில் அடியேனுடைய எழுபத்தேழு ப்ராயப்பூர்த்தியை முன்னிட்டு, கீழ்வருஷங்களின் வழக்கப்படியே எழுபத்தேழு லக்கங்கள்கொண்ட சில வியாஸங்களை யெழுதத்தொடங்கியுள்ளேன். இங்ஙனே வடமொழியிலும் ஒன்று எழுதி அடியேனுடைய வைதிகமனோஹரா பத்ரிகையில் வெளியிட்டு வருகிறேன். அதன் முதல் சுலோகம்,

ஸப்தஸப்ததிதமஸ்ய ஹாயநஸ்யாத்யயோ பவதி மீநமாஸி மே,
தேந ஸஜ்ஜநபதே ஸமர்ப்பயே ஸப்தஸப்ததிமஹார்த்தமாலிகாம். என்பதாம்.

இங்கு எழுதத்தொடங்குவது எழுபத்தேழு பெரியார்களின் பெருமை என்பது. பெரும்பாலும் உலகம் மதிக்கத்தகுந்தவர்களாயிருந்து, அடியேனுல் நெருங்கிப்பழகி அநுபவிக்கப்பட்டவர்களுமாயிருந்து வைகுண்டவாஸிகளான பெரியார்கள் எழுபத்தெழு வரை [க்ருஹஸ்தர்களும் உத்தமாச்ரமிகளுமானவர்களை] ப்ரஸ்தாவித்து அடியேனுடைய பழக்கத்தில் தெரிந்தமட்டில் அப்பெரியார்களின் ப்ரபாவங்களைச் சுருங்க வெளியிட உத்தேசம். தென்கலை வடகலை வாசி பாராமல் உபயகலைப் பெரியார்களையும் அநுபவிப்பேன். இதனுல் பின்புள்ளவர்கள் மிக்க பயன் பெறுவார்களென்பது அடியேனுடைய அபிஸந்தி.

அப்பெரியார்களில் பலருடைய திருவுருவப்படங்களை மிகவும் சிரமப்பட்டு சேகரித்து வைதிகலௌகிக மஹநீயமண்டலி என்னும் பெயரால் தனிப்புத்தகமாக [உயர்ந்த காகிதத்தில்] வெளியிட்டிருக்கிறேனுதலால் இங்கு அவர்களது பெருமைகளை மட்டும் வெளியிடுகின்றேன். அந்தத் திருவுருவப்படப் புத்தகம் விரும்புமவர்கள் (தபாற் செலவு உட்பட) இரண்டு ரூபாயனுப்பிப் பெறுக. அத்திருவுருவப் படங்கள் பெரும்பாலும் ஸ்ரீராமாநுஜனிலும் வெளிவந்திருப்பவையாதலால் அது கொண்டும் க்ருதக்ருத்யர் களாகலாம். ... ... ... ... ❃

## 1. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணுரங்காசாரியர் ஸ்வாமி.

முதன்முதலாக அடியேனுடைய திருத்தகப்பனுர் பெருமையை விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீரங்கநாத சர்மங்கொண்டவர். அண்ணுரங்காசாரியரென்றே வழங்கும் திருநாமம். நாற்பத்து மூன்று ஸம்வத்ஸரமே இவ்விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தார். குரோதி ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் திருநாடலங்கரித்தமையால் இற்றைக்கு

அறுபத்திரண்டரையாண்டு நிரம்பி விட்டது. அடியேனுடைய பதினுன்காவது பிராயம் முடிந்த ஏழா நாளில் பரம பதித்தபடி. அவரோடு நெருங்கிப் பழகினவர்களும் அவரிடத்தில் கல்வி பயின்றவர்களும் பத்தெட்டு ஸம்வத்ஸரங்களுக்கு முன்புவரையில் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் இப்போது வாழ்வதாக ஒருவரும் நினைவுக்கு வரவில்லை. அவருடைய திருவுருவப்படமும் சேகரிக்கப்படவில்லை. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் ஸம்ஸ்க்ருத பாடசாலை யொன்று பிரபலமாக நடந்து கொண்டிருந்தது. அதில் (திருத்தகப்பனுர்) ஸாஹித்யத் திற்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தார். அப்பாடசாலையில் நூற்றைம்பது வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள். காலை 10 மணிக்கும் மாலை 5 மணிக்கும் பாடசாலை விடும்போது மாடவீதிக்குத் திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் மேற்கே திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் காணப் படுவர்கள். ஸ்கூல் என்று சொல்லக்கூடிய பள்ளிக்கூடம் அப்போது சின்ன காஞ்சியிலோ பெரிய காஞ்சியிலோ ஒன்றுகூட ஏற்பட்டிருக்கவில்லை. அதனுல்தான் அப்போது ஸம்ஸ்க்ருத வித்யாபாட ப்ரவசனங்கள் குறையற நடந்து வந்தன.

தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள்ளே வஸந்தோத்ஸவ மண்டபத்திலும் ஒரு பாடசாலை அப்போது நடந்து வந்தது. அதற்கு சடகோப நிலயமென்று பெயர் வழங்கி வந்தது. வன்பாக்கம் சடகோபாசாரியார் என்னும் பெரியார் ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தவருடைய பொருளுதவியினுல் நடந்து வந்த காரணத்தினுல் அதற்கு சடகோப நிலயமென்று பெயரிடப்பட்டிருந்ததாகக் கேள்வி. அப்பாடசாலையில் நாற்பது ஐம்பது வித்யார்த்திகள் வாசித்து வந்தார்கள். வானமாமலை மடத்துப் பாடசாலையில் ஏழெட்டு உபாத்யாயர்களும் 150 வித்யார்த்திகளும் விளங்கின காலத்தை நினைத்துக்கொண்டால் *புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம் விபர்யாஸம் யாதோ கநவிரலபாவ: க்ஷிதிருஹாம்* என்கிற உத்தரராமசரித நாடகச்லோகமே நினைவுக்கு வருகிறது. அப்பாடசாலையின் ஆரம்பம் அடியேனுடைய ஜனனத்திற்கு முன்னமேயாயிற்று. திருத்தகப்பனுரிடத்தில் வாசித்தவர்கள் உபயகலையார்களும் ஸ்மார்த்தர்களும் மாத்வர்களும் பலர் இருந்தார்களப்போது. ஸன்னிதி வீதியில் உவே. மேல் பாக்கம் வீராதாதாசாரி யரென்று ப்ரஸித்தராயிருந்த வித்வானிடத்தில் காவ்யநாட காலங்காரங்கள் வாசித்து, அதே வீதியில் ஜகத்ப்ரஸித்த வித்வத்ஸார்வ பௌமராக எழுந்தருளியிருந்த [மேலே ப்ரஸ்தாவிக்கப் படப்போகிற] ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியிடத்தில் ஸாமாந்ய சாஸ்த்ரங் களும் அத்யாத்ம சாஸ்த்ரமும் பயின்றவர் திருத்தகப்பனுர். காஞ்சீபுரத்திற்குப் பத்து மைல் தூரத்தில் சித்தாத்தூரென்கிற அக்ரஹாரத்திற்கு அருகில் திருவடிராயபுரம் என்கிற சுரோத்திரியக்ராமம் எங்களுடையதாக இருந்தது. [அது இப்போது இல்லை; இருபத் தைந்து வருடங்களுக்கு முன்பு ஸர்க்காரால் ஸ்வீகரிக்கப்பட்டு விட்டது.] திருத்தகப்பனுர் காலத்தில் அநத்யயன தினங்களிலெல்லாம் அந்தக்ராமத்திற்கு நியமேந எழுந்தருளநேரும். அப்போதெல்லாம் அடியேனை விடாமல் உடனழைத்துச் செல்வது வழக்கம். திருநாட்டுக் கெழுந்தருளும் வரையில் ஒரு க்ஷணமும் அடியேனை அகல விடாதே உடனிருத்திக் கல்விபயிற்றுவித்த கருணையை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகும்.

திருத்தகப்பனுர் பரமவைதிகராகையாலும் வைதிகச்ரத்தையில் நிகரற்றவராகையாலும் அடியேனுக்கு சௌலம் உபநயனம் முதலானவற்றை ப்ராப்தகாலங்களிலேயே செய்வித்தருளினுர். தாம் முன்னின்று நடத்திவந்த வானமாமலைமடத்துப் பாடசாலை எந்த காரணத்தினுலோ அடியேனுடைய பன்னிரண்டாவது வயதில் நின்றுவிட்டது. ஆங்கிலப்ரசாரம் அதிகமாகத் தொடங்கினதுதான் காரணமென்று ஊஹிக்கவேண்டியதாகிறது. அப்போது அதே ஸன்னிதிவீதியில் பிரதிவாதிபயங்கரம் அண்ணுஸன்னிதியில் வேதாந்தவைஜயந்தி யென்ஞெரு பாடசாலை ஸ்ரீமதுபயவே. (ஜகத்குரு) காதிஸ்வாமியின் நியமனத்தினுல் ஆரம்பமாகியிருந்தது. அப்பாடசாலை நாலைந்து வருஷகாலமே நடைபெற்றது. திருத்தகப்பனுர் அதில் ப்ரதாநோபாத்யாயராக இருந்து நடத்திவந்தகாலத்தில் சில மாதங்களுக்குள்ளாகவே நோய்வாய்ப்பட்டுத் திருமாளிகையைவிட்டு அதிகமாக வெளிஸஞ்சாரம் செய்யமுடியாத நிலைமையையடைந்தார். அப்போது வித்யார்த்திகளைத் திருமாளிகையிலேயே வரவழைத்து காவ்ய நாடகாலங்காரபாடங்களை நடத்திக்கொண்டிருந்தார். பாடசாலைகளில் நடப்பதுபோலவே வகுப்புவாரியாகவும் மணிக்கணக்காகவும் பாடங்களை நடத்திவந்தார். ஸ்ரீ வைஷ்ணவர்கள் மட்டுமல்லாமல் ஸ்மார்த்தமாத்வர்களும் வாசித்துவந்தார்கள். அப்படி வாசித்தவர்களின் புத்ரபௌத்ரர்களை இப்போதும் பார்த்து வருகிறேன். அப்போது எனக்கு சிசுபாலவத [மாக] காவ்யபாடம் நடக்கிறது. மேல் வகுப்பில் சிலர் நைஷதம் வாசிக்கிருர்கள். அதற்கும் மேல் வகுப்பில் சிலர் அநர்க்கராகவம் [முராரி நாடகம்] வாசிக்கிருர்கள். இப்பாடங்களெல்லாம் க்ருஹத்திலேயே நடப்பதால் எந்த பாடத்திலும் நான் கூடவேயிருந்து கேட்டுவரவேணுமென்று திருத்தகப்பனுர் கட்டளையிட்டிருந்தார். அவருடைய ஆஜ்ஞையென்ருல் ஸுக்ரீவாஜ்ஞையென்று ஊர் முழுதும் ப்ரஸித்தம். ஆஜ்ஞையைக் கடவாமல் நடந்துவந்தேன். [அப்படியிருந்தும் ப்ரபல ப்ரஹாரங்களும் இடையே பெற்றுவருவேனென்பதுநிற்க.] திருத்தகப்பனுருடைய பாண்டித்யமும் போதநாசாதுர்யமும் ஈடுமெடுப்புமில்லாதது. அக்காலத்தில் காஞ்சிக்கு வரும் வித்வான்களனைவரும் அவரிடம் வருவர்கள். அப்போது ஸ்ரீ காதிஸ்வாமி அந்தரங்கராயும் மஹௌதார்யம் மிக்கவராயுமெழுந்தருளி யிருந்தபடியால் அந்த ஸ்வாமி மூலமாக யோக்யதாநுகுணமாய் பஹுமானங்கள் பெறுவிப்பது வழக்கம். வாசித்தவர்களெல்லாரும் வித்வான்களாவர்களோ? திருத்தகப்பனுர் தம்மிடம்வரும் வித்வான்களைப் பரீக்ஷியாமலிருப்பதில்லை. அப்போது நான் சிறுபிராயத்தவனுயிருந்தாலும் பரீக்ஷா விஷயங்களை நானும் நன்கு தெரிந்துகொள்ளும்படி செய்தருள்வர் திருத்தகப்பனுர். அவரிடத்தில் அடியேன் வாசித்துத் தெரிந்து கொண்டவற்றிற்காட்டிலும் அவர் வித்வான்களைப் பரீக்ஷிக்கும் ஸந்தர்ப்பங்களிலிருந்து தெரிந்துகொண்டவையே அதிகமென்னலாம். ஸ்ரீ ராமாநுஜன் 214-ல் அடியேன் வெளியிட்டிருக்கின்ற வித்யாபரிச்ரமபரீக்ஷா என்னும் வியாஸத்தில் முடிவான (25-வது) வாக்யச்ரேணியைமட்டும் இங்கே அநுவதித்து இப்பெருமையநுபவத்தை முடிக்க நினைக்கிறேன். (அங்குள்ள வாக்யத்தின் அநுவாதம்.)

அடியேனுடைய திருத்தகப்பனுரிடத்தில் மஹாபாஷ்யாந்த பண்டிதரென்று ஒரு பிரபல பண்டிதர் வந்திருந்தார். (முன்னம் சென்ற சுபக்ருத் வருஷத்துக் கதையிது.) அவரோடு நாலைந்து நிமிஷம் பேசினவாறே அவருடைய பாண்டித்ய ஸ்வரூபத்தைத் தெரிந்து கொண்ட திருத்தகப்பனுர் 'சப்தமஞ்ஜரியில் ஒரு ஸந்தேஹம்' என்று கேட்கத்

தொடங்கினர். 'சுசி சப்தம், ம்ருது சப்தம், கர்த்ரு சப்தம்...இவற்றை சப்தமஞ்ஜரியில் நபும்ஸகலிங்கமாகவே யெடுத்துக்காட்டியிருக்கிறதே, இவை பும்லிங்க ஸ்த்ரீலிங்கங்களில் கிடையாதோ? கர்த்தா—கர்த்ரீ என்றும், ம்ருது:—ம்ருத்வீ என்றும் பிரயோகங்கள் காண்கிறோமே; அப்படியிருக்க நபும்ஸகலிங்கத்தில் மட்டுமே கர்த்ரு, கர்த்ருணீ...என்று காட்டியிருக்கிறதே; மற்றவை விட்டுப்போயிற்று என்ன? அல்லது இதர லிங்கங்களில் பிரயோகிப்பது தவறு?'' என்று கேட்டார். அதற்கு அவர் சொல்லுகிறார்—'சப்தமஞ்ஜரி ஏழெட்டு வயதில் வாசித்தது; வாசித்ததாகக்கூட ஞாபகமில்லை. அதில் இப்போது கேட்டால் அடியேன் என்ன சொல்லுவது? மஹாபாஷ்யத்தில் ஏதாவது கேட்டால் சொல்லுகிறேன்' என்றார். எழுந்தருள வேணுமென்று சொல்லியனுப்பி விட்டார். இத்தகைய கேள்விகளை இக்காலத்துப் பிரபல பண்டிதர்களிடத்திலும் தாராளமாகக் கேட்கலாம்: கேட்டவுடனே தூக்கியெறிந்தாற்போல் விடைகூறவல்ல மேதாவி வித்வான்கள் இல்லாமற்போகவில்லை. அன்னவர்களைத் தேடிப்பிடிக்க வேண்டும். "ஸஹஸ்ரேஷு கச்சித்'' என்றாப்போலவே தேறுவர்களத்தனை. மற்றையோர்களுக்கு இந்த ப்ரஸ்தாவமே புரியாது.

இப்படிப்பட்ட பரீக்ஷைகளைத் திருத்தகப்பனர் பெரிய வித்வான்களிடம் செய்து விட்டு...அவர்கள் சென்ற பிறகு அந்த விஷயமருமங்களை அடியேனுக்கும் ஸஹபாடிகளுக்கும் லகுவாக உணர்த்தியருள்வர். "தே ஹி நோ திவாஸா கதா:'' என்று கண்ணீர்ப்பெருக்குடன் நிற்கிறேன். ஆயிரம் பக்கமெழுதினாலும் ஆராது. ...

## 2. ஸ்ரீமத்பரமஹம்ஸ-அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி.

தேவப்பெருமாளது கிழண்டை கோபுர வாசலில் விளங்கும் அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடத்தில் 1916-ஆம் வருடத்திற்குமுன்பு நாற்பது ஸம்வத்ஸர காலம் ஆஸ்தான மலங்கரித்து விளங்கின ஜகத்ப்ரஸித்த மடாதிபதி ஜீயர்ஸ்வாமி ஷஷ்டி ஜீயர்ஸ்வாமியென்று வழங்கப்பட்டு வந்தார். சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்து திருவம்சத்தில் அவதரித்ததனுல் ஷஷ்டியார் என்று குடும்பப் பெயராக வழங்குவது. அந்தரீதியில் ஷஷ்டி ஜீயர்ஸ்வாமியென்றே இந்த ஜீயர்ஸ்வாமி ப்ரஸித்தி பெற்றிருந்தார். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் அடியேனுக்கு ஸாக்ஷாத்மாதாமஹராவர். இவர் பூர்வாச்ரமத்தில் ஷஷ்டி வரதாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் தென்மொழியும் வடமொழியும் திகழ்ந்த நாவராய் விசேஷித்துத் தமிழ்ப் புலவர் திரளில் ப்ரதம பரிகணிதராய் விளங்கி வந்தார். முன் பகுதியில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட சடகோப நிலைய பாடசாலையில் ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமி காலத்தில் தமிழிலக்கண விலக்கியங்களுக்கு உபாத்யாயபதவியை அலங்கரித்துவந்தார். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீ வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமியைப்பற்றிக் கேள்விப்படாதாரிலர். அந்த ஸ்வாமி ஸ்ரீஉவே. புன்னை. சீமாச்சார் ஸ்வாமியென்பவருடைய மாணுக்கர். அந்த சீமாச்சார் ஸ்வாமி ப்ரக்ருதஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலேயே (பூர்வாச்ரமத்தில்) மாணுக்கராக வாழ்ந்து தேர்ச்சி பெற்றார்.

ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரமான பிறகும் அதற்கு முன்பும் ஸன்னிதி வீதியில் விக்க்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே; திருமலை. ஈச்சம்பாடி நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் உபயவேதாந்த ரஹஸ்யக்ரந்தங்களை வரியடைவே அதிகரித்துப் பல நூற்றுவர்க்குப் பிரவசனம் செய்தருளின பெருமை ஸ்ரீ ஸ்வாமிக்கே அஸாதாரணமாக அமைந்திருந்தது. தென்னாட்டில் விளங்கின—விளங்குகின்ற மடாதிபதிகளுக்குள் ஸ்ரீ ஸ்வாமியைப்போல் ப்ரவசனம்செய்த மஹான்கள் வேறில்லையென்று சொல்லலாம். அடியேனுக்கு ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதியிலிலேயே ரஹஸ்ய க்ரந்தங்களும் அருளிச்செயல் வியாக்கியானங்கள் பூர்த்தியாகவும் ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. இளமையிலேயே அஷ்டப்ரபந்தம், கம்பராமாயணம்: நன்னூல் முதலிய இலக்கண நூல்கள் இவற்றைப் பாடமாகக் கற்பித்தருளினார். ஸ்ரீ ஸ்வாமிக்கு இலக்கண இலக்கிய நூல்களெல்லாம் வாசோவிதேயங்களாயிருந்தன. ஸ்வாமி வாசித்த காலத்தில் எந்த நூலும் அச்சேறவில்லை யென்றும் ஓலைச்சுவடிகளில்தான் வாசித்ததென்றும் ஸாதிக்கக் கேட்டிருந்தேன். ஸ்ரீ ஸ்வாமி ஸாமவேதியாகையால் இளமையில் பச்சை பெருமாள் கோயிலென்கிற முதலியாண்டான் ஸன்னிதியில் வாழ்ந்தகாலத்தில் ஸாமசாகையைப் பூர்த்தியாக அத்யயனம் செய்தருளியிருந்தார். ஸங்கீதப்புலமை ஸ்வாமிக்கு இயற்கையானது. ஆங்காங்கு திவ்யதேசங்களில் உத்ஸவங்களுக்கெழுந்தருளுகையில் கோஷ்டியில் வீணை வாசித்துக்கொண்டே உபந்யாஸங்கள் ஸாதித்தருள்வது வழக்கம். தென்னாட்டு வடநாட்டுத் திருப்பதியாத்திரையை ஸ்வாமி பரிபூர்த்தியாகச் செய்தருளியிருந்தார். ஸ்வாமிக்கு ஸ்வயமார்ஜித சிஷ்யஸம்பத்து அபரிமிதமாயிருந்தது. திவ்யமங்கள விக்ரஹத் தோற்றம் பரமகம்பீரமாயிருந்ததனால் "ஆடவர் பெண்மையை அவாவும்" என்ற கணக்கிலே பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரியாக எழுந்தருளியிருந்தார். ... ❁

## 3. ஸ்ரீமதுபயவே. ஜகத்குரு காதிஸ்வாமி.

"ஸ்ரீமுககும்பஸ்வாதீஜாதமநந்தார்ய ஸூரிமஹமீடே, ஸ்ரீக்ருஷ்ணஸூரிதநயம் வாதிபயங்கரகுலாப்தி சந்த்ரமஸம்." என்கிற நித்யாநுஸந்தேய திருநக்ஷத்திரத் தனியன்படி ஸ்ரீமுகஸம்வத்ஸரம் மாசிமாதம் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் இந்த விபூதியில் வந்து தோன்றி அறுபத்திரண்டு ஸம்வத்ஸரம் வாழ்ந்தருளி ஸ்ரீ ஸ்வாமி செய்தருளின அதிமாநுஷ க்ருத்யங்கள் அவாங்மனஸகோசரமென்று ஒரே வார்த்தையில் தலைக்கட்டத்தக்கது. ஆயினும் ஸ்வல்பமே விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீ காஞ்சியில் ஸன்னிதிவீதியில் வடவண்டை வாடையில் ஸ்ரீ ஸுதர்சனாழ்வானுடைய ரக்ஷைபெற்ற மிகப்பெரிய திருமாளிகை 'காதி அனந்தாசாரியர் திருமாளிகை' என்றும் 'காரணையனந்தாசார் திருமாளிகை' என்றும் ப்ரஸித்திபெற்றது. இந்த ஸ்வாமியின் முன்னோர்கள் காரணையென்னும் அக்ரஹாரத்தில் வாழ்ந்துவந்ததனால், ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்குமுன்பு வாழ்ந்தவரும், மூதன்முதலாக வடதேசங்களுக்கெழுந்தருளி சிஷ்யஸம்பத்தைப் பெற்றவரும், புஷ்கர க்ஷேத்ரத்தில் விக்ரஹப்ரதிஷ்டை பெற்றிருப்பவருமான பெரிய அனந்தாசார்யஸ்வாமிக்கு 'காரணை அனந்தாசாரியர்' என்கிற ப்ரஸித்தியிருந்துவந்தது. அந்த மஹாஸ்வாமியின் ஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த காதிஸ்வாமி இளமையில் அடியேனுடைய திருத்

தகப்பனாரிடம் சில வருஷங்கள் கல்வி பயின்று, திருப்பதியில் எழுந்தருளியிருந்த ஜகத் விக்யாத வித்வத்ஸார்வபௌமரும் தமக்கு ஸாக்ஷாந்மாதுலருமான ஸ்ரீமத் திருமலை அனந்தாண் பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி திருவடிவாரத்தில் சென்று சேர்ந்து பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் அங்கேயே குடி வாழ்ந்து ஸகல சாஸ்த்ர பாரங்கதராய் தீபாதுத்பந்நப்ரதீபமாய் விளங்கினர்.

சிஷ்யாநுக்ரஹார்த்தமாக வடநாட்டில் பலகால் ஸஞ்சாரம் செய்தருளி, காசியில் வித்வான்களை வென்று விசிஷ்டாத்வைத விஜயஸ்தம்பம் நாட்டி பாம்பே மகாநகரத்தில் பனஸவாடியில் திருவேங்கடமுடையான் ஸன்னிதியை அத்யத்புதமாக ப்ரதிஷ்டிப்பித்து, மற்றும் மார்வாடத்தில் ரோல் முதலான விடங்களிலும் ஆலய ஸ்தாபனங்கள் செய்தருளின பெருமை இந்த ஸ்வாமிக்கு அஸிதரஸாதாரணமானது. காஞ்சியில் தமது திருமாளிகையின் பக்கத்திலேயே ஸ்ரீஸுதர்சநமுத்ராக்ஷரசாலை யென்று ஜகத் ப்ரஸித்தமான அச்சுக்கூடமொன்று ஸ்தாபித்து அதில் சதுச்சாஸ்த்ரக்ரந்தங்களையும் சில பஞ்சராத்ரஸம்ஹிதைகளையும் பல ஸம்ப்ரதாய நூல்களையும், விசேஷித்து சண்டமாருத ஸஹித சததூஷணியையும் ந்யாய பாஸ்கரத்தையும் மற்றுஞ்சில (மைஸூர்) அனந்தாழ்வான் வாதக்ரந்தங்களையும் பிரசுரித்த பெருமையும் ஸ்ரீஸ்வாமிக்கே அஸாதாரணமானது. ஸாதாரணரீதியிலிருந்த திருமாளிகையை லக்ஷம் ரூபாய் செலவில் உத்தரிப்பித்தருளினர். தம் திருத்தகப்பனார் ஏறியருளப்பண்ணின (அஸ்மத்குலகூடஸ்தரான) ப்ரதிவாதி பயங்கராசாரியருடைய ஸன்னிதியை ப்ராகார கோபுர மண்டபாதி நிர்மாணங்களினால் விசேஷமாக உத்தரிப்பித்தருளினர்.

ஸ்வாமியெம்பெருமானார் ஆளவந்தார்க்குத் தாம் இட்டருளின தனியனில் "வஸ்துதாமுபயாதோஹம்" என்றருளிச்செய்த கணக்கிலே அவஸ்து ப்ரஸ்தாவேஷு அக்ரகணநீயனாயிருந்தவடியேன் ஒரு வஸ்துவாக ஆகப்பெற்றது ஸ்ரீஸ்வாமியின் பரம கருணைக்கு இலக்காகப் பெற்றதனாலேயே. திருத்தகப்பனார் திருநாட்டுக்கெழுந்தருளின போது ஸ்ரீஸ்வாமி மார்வாடத்தில் சிஷ்யஸஞ்சாரத்தில் எழுந்தருளியிருந்து, பிறகு நாலாறு மாதத்தில் காஞ்சி சேர்ந்தருளினது முதலாகப் பெரும்பாலும் ஸ்வாமி திருவடிவாரத்திலேயே வாழ்ந்திருந்தேன். சிலசில ஸமயங்களில் வடநாட்டு யாத்திரையிலும் அநுசரனாக அந்வயிக்கப் பெற்றேன். அடியேனுடைய பத்தாவது வயதில் ஸ்வாமி மஞ்ஜுபாஷிணி என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையை ப்ரசுரிக்கத் தொடங்கினர். அது இரண்டு வருஷம் மாஸிகமாகவும், மூன்று வருஷம் பாக்ஷிகமாகவும் நடந்து வந்து ஆறுவது ஸம்வத்ஸரம் முதலாக ஸாப்தாஹிகமாய் [வாரந்தோறும்] நடந்துவர ஆரம்பித்தது. அடியேனுடைய பதினாறு பதினேழு வயதில் அந்த பத்ரிகையின் ஸம்பாதனதுரந்தரத்வத்தை அடியேனுக்கு அதீனமாக்கியருளி "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்ற ஆழ்வாரருளிச்செயலின்படி அடியேனைத் திருத்திப் பணிகொண்ட வகைகள் வாசாமகோசரம். ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி முப்பது ஸம்வத்ஸரங்களாய்விட்டாலும் தேவப்பெருமாள் ஸன்னிதிவீதியிலெழுந்தருளும் போது திருமாளிகை வாசலில் ஸ்ரீஸ்வாமி நின்றருள்வதுபோலவே காட்சி கிடைத்து வருகிறது. தம்முடைய அபரிமித பாண்டித்யப்ரபாவத்தாலே ஜகத்குரு பட்டமும்

பெற்று விளங்கின ஸ்ரீஸ்வாமியின் புத்ரபௌத்ர, துஹித்ரு தௌஹித்ர ஸந்தான ஸம்ருத்தியும் குறையற்று வாழ்கின்றமைக்குப் பொலிகபொலிக வென்று பல்லாண்டு பாடி நிற்கிறேன். ... ... ...

## 4. ஸ்ரீமதுபயவே. திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி.

திருப்பதியில் ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்யஸ்வாமி யென்று தென்னாடும் வடநாடும் ஸுப்ரஸித்தராயிருந்த மஹாவித்வத் பரிப்ருடர் எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி பரமபதித்து இற்றைக்கு 40 வருஷமாகிறது. மேலே ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியைப்பற்றி யெழுதப்போகிறேன். மண்ணுலகுக்கு ஸூர்ய சந்திரர்களென்றே வழங்கப்பட்டு வந்தனர் இவ்விருவரும். ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலில் ஜ்ஞானஸம்பத்தோடுகூட அநுஷ்டானஸம்பத்தும் அதிசயிதமாக விளங்கிற்று. சதுச்சாஸ்த்ரபாண்டித்யத்தோடுகூட மற்றும் அநேக கலைகளிலும் பாண்டித்யம் ப்ரசுரமாயிருந்தது. பிற்காலத்தில் ஸ்ரீகாதி ஸ்வாமியோடொப்ப ப்ரஸித்த வித்வான்களாக விளங்கின ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர், ஸ்ரீமத் கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி முதலானாரும் இந்த ஸ்வாமி பக்கலிலேயே நெடுங்காலம் வித்யார்த்திகளாக வாழ்ந்தவர்கள். திருப்பதியில் இப்போது பிரபலமாக விளங்கிவருகின்ற வித்யாசாலையானது முந்துறமுன்னம் இந்த ஸ்வாமியினால் ஸாமான்யமாகத் தொடங்கப்பட்டதாம். இந்த ஸ்வாமியின் காலத்திலேயே அது ப்ராபல்யமடைந்து விட்டது.

ஸ்வாமி வடநாட்டில் திக்விஜய யாத்திரைகள் பலகால் செய்தருளினவர். பாடலீபுத்ரஸபையென்று நாலைக்கும் ப்ரஸித்தமாக வழங்கப்பட்டு வருகிறது. அதாவது பாட்னாவில் சைவவைஷ்ணவக் கிளர்ச்சிகள் த்வைதாத்வைதக் கிளர்ச்சிகள் பிரபலமாக நேர்ந்தபோது ஸ்ரீ ஸ்வாமியை அந்நாட்டுப் பிரமுகர்கள் வரவழைத்து மாதக்கணக்கில் வாக்யார்த்த சர்ச்சைகளை நடத்திவைத்தார்களென்றும், அப்போது ஸ்ரீஸ்வாமி அத்விதீயராக வாதங்கள் செய்து வெற்றி பெற்றாரென்றும் புஸ்தகாரூடமாய் விளங்குகின்றது. திருச்சுகனூரில் (திருச்சானூரில்) விக்ரஹம். தேசிகாசார்ய ஸ்வாமி யென்கிற வித்வானிடத்திற்கு நித்யமும் சென்று சாஸ்த்ரங்கள் அதிகரித்ததாக ஸ்வாமியே ஸாதிக்கக் கேட்டிருந்தேன். ஸ்வாமிக்கு ஸ்ரீகாஞ்சீப்ராந்தத்து அக்ரஹாரங்களில் வம்சபரம் பராப்ராப்தர்களான சிஷ்யர்கள் பலருளர். வடநாட்டில் ஸ்வாமியின் அப்ரதிமப்ர பாவத்தைக் கண்டு திருவிலச்சினைபெற்று சிஷ்யர்களானார் பலர். ஸ்ரீஸ்வாமியருளிச்செய்த திவ்யக்ரந்தங்கள் பலதுறைகளில் அமைந்து தேவநாகரலிபியிலும் தெலுங்குலிபியிலும் அச்சிடப்பட்டுள்ளன. ஸ்ரீஸ்வாமியோடு அடியேனுக்கு இரண்டு வகையான தேஹஸம்பந்த பாக்யமும் அமைந்திருந்தது. அடியேனுடைய பித்ருவ்யர் ஸ்ரீஸ்வாமியின் ஸாக்ஷாத் ஜ்யேஷ்டஜாமாதா. அந்த பித்ருவ்யர் திருப்பதிக்கு ஸ்வீக்ருதராய் 'திருப்பதி அண்ணா' என்றே ப்ரஸித்திபெற்றிருந்தவர். மற்றொரு ஸம்பந்தமாவது, ஸ்ரீஸ்வாமியின் ஜ்யேஷ்ட ஸஹோதரருடைய பௌத்ரர்க்கு அடியேனுடைய தங்கை வாழ்க்கைப் பட்டவள்.

இந்த ப்ரத்யாஸத்தி விசேஷங்களாலே ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு அடிக்கடி விடை கொள்ளும் பாக்கியம் பெற்றிருந்தேன். ஸ்வாமி ஸன்னிதியில் காலை வேளைகளில் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபமும், மாலை வேளைகளில் பகவத்விஷய காலக்ஷேபமும், பகல் வேளையில் சாஸ்த்ரப்ரவசனமும் நியமேந நடந்து கொண்டிருந்தது.

சந்த்ராலோகத்தில் துல்யயோகிதாலங்காரத்திற்கு உதாஹரணம் "தர்மோர்த்த இவ பூர்ணஸ்ரீ: அர்த்தோ தர்ம இவ த்வயி" என்றுள்ளது. அதேபோல ஸ்ரீஸ்வாமி பக்கலில் ஜ்ஞானமானது அனுஷ்டானம் போலவும், அனுஷ்டானமானது ஜ்ஞானம் போலவும் ஸமரீதியில் புஷ்கலமாக விளங்கியிருந்தது. நித்யாக்நிஹோத்ரியென்று ப்ரஸித்தி பெற்றிருந்தார்.

சாந்தோக்ய-உபநிஷத்தில் "ஆசார்யவாந் புருஷோ வேத" என்று ஓதிற்று. ஆசார்ய ஸம்பந்தத்தாலல்லது உஜ்ஜீவிக்க விரகில்லை. ஆசார்ய சப்தத்திற்குப் பலவகை யான வ்யுத்பத்திகளுண்டு; "ஆசிநோதிஹி சாஸ்த்ரார்த்தாந் ஆசாரே ஸ்தாபயத்யபி, ஸ்வயமாசரதே யஸ்மாத் தஸ்மாதாசார்ய உச்யதே." என்கிற ஒரு பிரமாண வசனத்தை மட்டும் திடமாகக் கொள்க. இதில் "ஆசிநோதி இதி ஆசார்ய:, ஆசாரயதி இதி ஆசார்ய:, ஆசரதீதி ஆபசார்ய:. என்று மூவகையான வ்யுத்பத்திகள் காட்டப்பட்டுள்ளன. [சாஸ்த்ரார்த்தாந் ஆசிநோதி] உயர்ந்த மிகப் பெரிய மாமரத்தில் இனிய கனிகள் பழுத்துத் தொங்குமாபோல நாநா சாஸ்த்ரங்களாகிற கனிகள் அபரிமிதமாகப் பழுத்திருக்கின்றன; அவற்றையெல்லாம் பறித்துவைத்துக்கொள்பவர் ஆசார்யர். ஏடு பார்த்துச்சொல்ல வேண்டாதபடி எந்த அர்த்தத்தையும் கரதலாமலகமாகக் கொண்டிருப்பவரென்றவாறு. [ஆசாரே ஸ்தாபயத்யபி] *பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட* (திருவாய்மொழி 4-8-2) என்றும், *ஸ்காலித்யே சாஸிதாரம்* (ந்யாஸ விம்சதி.) என்றும் சொல்லுகிறபடியே அடி பணிந்தவர்களை நன்றாக சிக்ஷித்து சாஸ்த்ரார்த்தங்களை அநுஷ்டிப் பிக்கவல்லவர் ஆசாரியர். [ஸ்வயமாசரதே] "பரோபதேசே பாண்டித்யம் ஸர்வேஷாம் ஸுலபம் ந்ருணாம், ஸ்வஸ்யாநுஷ்டாநஸமயே முநயோபி ந பண்டிதா;" என்பர் மஹான்கள். 'அப்படியிருக்கவேணும், இப்படியிருக்கவேணும்; அதுசெய்யவேணும் இது செய்ய வேணும்' என்று பிறர்களுக்கு உபதேசிக்கவல்லவர்கள் பலருளர்; தாங்கள் அனுட்டித்துக் காட்டுபவர்கள் மிகச் சிலரே. *ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடையனான குருவை யடைந்தக்கால்...* என்கிறார் மணவாள மாமுனிகள். "ஞானமில்லாதவன் குருடனைப் போலே; அனுட்டானமில்லாதவன் நொண்டியைப்போலே" என்பர்கள். வழிநடந்து செல்வதற்குக் கண்ணும் வேண்டும், காலும் வேண்டும். அதுபோல ஜ்ஞாநாநுஷ்டானங் களிரண்டும் உச்சைர்கதிக்கு இன்றியமையாதவை. திருவிருத்தத்தில் நம்மாழ்வார் சில வண்டுகளை விளித்துச் சொல்லும்போது *வீசும் சிறகால் பறத்தீர். விண்ணாடும் நுங்கட்கெளிது* என்கிறார்; வண்டுகள் சிறகால் பறப்பது அனைவருமறிந்ததேயன்றோ. அதைச் சொல்லவேணுமோ ஆழ்வார்? ஆசார்யஹ்ருதயத்தில் "சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞானகர்மங்களைச் சிறகென்று" என்றருளிச் செய்தபடியே ஜ்ஞாநாநுஷ்டானங்களைச் சிறகாகச் சொன்னபடி. ஸாரக்ராஹிகளை வண்டாகச் சொன்னபடி. இவர்களுக்கு 'விண்ணாடும் எளிது' என்றபடியாலே ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நர்களுக்குத்தான்

உச்சைர்கதி எளிதென்று தெரிந்துகொள்ளவேணும். ஆக, ஸகல சாஸ்த்ரார்த்தங்களேயும் கரதலாமலகமாகக்கொண்டு அனுஷ்டான அநுஷ்டாபனங்களில் வல்லவர்களானுர்க்கே ஆசார்யத்வபூர்த்தி யுண்டென்றதாயிற்று.

இத்தகைய ஆசாரியர்களில் சிறப்புற்று விளங்கினவர் *யச: காயேந ஜீவத்ஸு அக்ரேஸரரான ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி. அவரே அஸ்மதாசார்யர்க்கு ஆசார்யர். அவர் திருநாடலங்கரித்து நாற்பது ஸம்வத்ஸரங்களானுலும் அவருடைய புகழுடம்பு தென்னுடும் வடநாடும் எங்கும் நிலவியுள்ளது. ... ... ... ❁

# 5. ஸ்ரீமதுபயவே. குன்றபாக்கம் ஸ்வாமியின் வைபவம்.

ஸ்ரீ காஞ்சீபுரியானது முற்காலத்தில் பிரபல வித்யாபீடமாக விளங்கிக் கொண்டிருந்ததென்பதை எந்நாட்டினரும் அறிவர். ஏறக்குறை முப்பத்தைந்து வருஷங்களுக்குமுன் இம்மஹாநகரத்தில் த்ரிமதஸ்தர்களிலும் பிரபல வித்வான்கள் சதுச் சாஸ்த்ர பண்டிதர்களென்று புகழ்பெற்று விளங்கிக் கொண்டிருந்தார்கள். அன்னவர் களில் குன்றபாக்கம் ஸ்வாமியென்றே ப்ரஸித்திபெற்றிருந்த மஹாஸ்வாமி ஈடுமெடுப்பு மில்லாத வித்வத் ஸார்வபௌமராக விளங்கியவர். 'குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமி' யென்றே இவர்க்கு ப்ரஸித்தி. வடதேசங்களில் சிங்களாசார்ஸ்வாமி யென்று ப்ரஸித்தி, இந்த ஸ்வாமி சதுச்சாஸ்த்ரங்களிலும் வல்லவரெனினும் நியாய வேதாந்தங்களில் அஸிதர ஸாதாரணமான வைதுஷ்யம் பெற்றிருந்தார். நியாய சாஸ்த்ரத்தில் யார் எத்தனை கோடிகள் சொன்னுலும் இந்த ஸ்வாமியின் கோடியே மேம்பட்டு நிற்குமென்று ஸகல வித்வான்களும் ஏககண்டமாகச் சொல்லுவார்கள். ஸ்வாமியினுடைய திருமாளிகை சின்ன காஞ்சீபுரம் ஸன்னிதி வீதியிலுள்ளது. அந்த வீதியிலேயே ஸ்ரீ வானமாமலை மடத்தில் ஸ்வாமியினுடைய தலைமையில் ஸம்ஸ்க்ருத பாடசாலை 20, வருஷகாலம் வெகு சிறப்பாக நடந்துவந்ததென்பது முதற்பகுதியில் விவரிக்கப்பட்டது. அதில் நியாய வேதாந்த ப்ரவசனம் செய்து பலபேர்களை சாஸ்த்ராதிகாரிகளாக ஆக்கியருளினர். அக்காலத்தில் வாயி நாராயணுசார்ய ரென்றும் எலத்தூர் கிருஷ்ணுசாரென்றும் ப்ரஸித்தர் களான இரண்டு மாத்வர்கள் ஸ்வாமியிடம் நியாய சாஸ்த்ரத்தைப் பூரணமாக வதிகரித்துப் புகழ் பெற்றவர்கள். ஸ்ரீவானமாமலையாஸ்தானத்தை இப்போது அலங்கரித்தருளா நின்ற வர்த்தமாந ஸ்ரீ ஸ்வாமி சிலவருஷகாலம் இங்கே யெழுந்தருளியிருந்து ஸ்வாமியிடம் க்ரோடபத்ரங்கள் வாசித்தார். ஸ்ரீ வைஷ்ணவர்களில் பத்து வருஷங்களுக்குமுன் பரமபதித்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி யொருவர் ஸ்ரீ ஸ்வாமியினுடைய கீர்த்திக்கு விஜயஸ்தம்பமாயிருந்து திருப்பதி ஸம்ஸ்கிருத காலேஜில் பலவருஷங்கள் சாஸ்த்ரோபாத்யாயராக இருந்தார்.

ஸ்வாமியினுடைய பாண்டித்யத்திற்கு சாச்வத ஜயஸ்தம்பமாக தத்வரத்நாவளி யென்கிற க்ரந்தமொன்று மணிமஞ்ஜூஷையென்கிற வியாக்கியானத்தோடுங்கூட அவதரித்து (தெலுங்குலிபியில்) அச்சாகியுமுள்ளது. ஸ்ரீ பாஷ்யத்தை அப்படியே ஸ்ரக்தரையில் ச்லோகமாக்கின க்ரந்தமிது. பூர்த்தியாகவில்லை. ஏறக்குறைய ஒரு அத்யாயத்

திற்குத்தான் இந்த க்ருதிரத்னம் அமைந்தது. சென்னையில் சிங்கம் செட்டி யதீந்திரப்ரவண செட்டிசாரிடியார் இந்த மஹாக்ரந்தத்தை தங்களுடைய பொருட்செலவில் அச்சிட்ட வர்களாகையாலே அவர்கள் வித்வான்களுக்கு இனமாக இப்புத்தகத்தையளித்து வருகிறார்கள். அபேக்ஷையுள்ளவர்கள் அவர்களுக்கு எழுதிக்கொள்ளவேணும்.

ஸ்ரீ ஸ்வாமியின் திருவுருவம் பரமகம்பீரமாக விளங்கும். ஆஜாநுபாஹுவென்கிற சொல்லுக்கு ஸ்ரீ ஸ்வாமியே ப்ரதமலக்ஷ்யமாக விளங்கினவர். அடியேனுடைய திருத்தகப்பனார் ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதியிலேயே ஸகலமும் க்ரஹித்தவரென்பதை அவருடைய பெருமை விளக்கத்தில் விஜ்ஞாபித்திருக்கிறேன். அடியேன் இருபத்தைந் தாவது பிராயம் வரையில் ஸ்ரீ ஸ்வாமியின் பெருமைகளை யநுபவித்திருக்கிறேன். தேவப் பெருமாளுடைய இயல் கோஷ்டிகளிலும் ஆழ்வாராசார்ய மஹோத்ஸவ ஆஸ்தான கோஷ்டிகளிலும் ம்ருது மதுரமான அநுஸந்தானத்துடன் தவறாது ஸேவை ஸாதித் தருள்வர். பரத்வமும் ஸௌலப்யமும் குறையறத் தாண்டவமாடின மஹாவ்யக்தி ஸ்ரீ ஸ்வாமியேயாவர். ஸ்வாமியின் பௌத்திரர் இந்தத் திருநாமமே கொண்டவராய் அட்வகேட்டாக விளங்கிவருகிறார். ஸ்ரீ ஸ்வாமி ப்லவவருடத்தில் திருவவதரித்து எழுபத்துமூன்று திருநக்ஷத்ரம் இந்த விபூதியை யலங்கரித்திருந்து ஆனந்தஸம்வத்ஸரத்தில் திருநாடலங்கரித்தருளினர். ... ... ... 

# 6. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யர்ஸ்வாமி.

இந்த மஹாபுருஷர் திருநாட்டுக்கெழுந்தருளி முப்பது ஸம்வத்ஸரமாகிறது. உலகத்தில் மிகவும் ப்ரஸித்தமாக வழங்கிவருகின்ற *ந பூதோ ந பவிஷ்யதி* என்கிற வாக்கானது இந்த ஸ்வாமி ஒருவருக்கே தகும். உலகத்தில் மற்ற மஹான்கள் ஸம்பாதிக்கும் யோக்யதைகள் மற்றும் பலரிடத்தும் காணக்கூடியவையேயாகும். இந்த ஸ்வாமி ஸம்பாதித்திருந்த யோக்யதைகள் முக்காலத்திலும் அஸிதரஸாதாரணமென்பதை விஜ்ஞாபிப்பதற்கும் அடியேன் அநர்ஹன். தென்னாடு முழுவதிலும் இவருடைய யோக்யதைகள் நன்கு பரவியிருப்பதால் அடியேன் எடுத்துரைப்பது பிஷ்டபேஷணமே யாகும். வேதத்திலும், ஆழ்வாரருளிச் செயல்களிலும், ஆசார்ய திவ்ய ஸூக்திகளிலும், இதிஹாஸ புராணங்களிலும், காவ்ய நாடகாலங்காரங்களிலும் இந்த ஸ்வாமி பரிச்ரமப் பட்டு ஸம்பாதித்திருந்த யோக்யதை ஒருவர்க்கும் ஒரு புருஷாயுஸ்ஸில் ஸம்பாதிக்கக் கூடியவையல்ல என்பது ஸத்யம். இந்த ஸ்வாமி பெரும்பாலும் வித்யாக்ரஹணம் செய்தது ஸ்ரீபெரும்பூதூரில். திவ்யதேச வாஸத்தையே பரமபுருஷார்த்தமாகக்கொண்டு பலபல திவ்யதேசங்களில் வாழ்ந்துகொண்டு நியதமுமத்தாணிச் சேவகம் புரிந்தார். நம்பெருமாள் ஸந்நிதியில் ஏழெட்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து வேதபாராயண கைங்கரியம் நிர்வஹித்தருளினார். திருநின்றவூர், திருநீர்மலை. திருவல்லிக்கேணி, ஆழ்வார் திருநகரி முதலான பல தலங்களில் மாதக்கணக்கிலும் வருஷக்கணக்கிலும் எழுந்தருளி யிருந்து உபயவேத கோஷ்டிகளையும் நிர்வஹித்தருளினார்,

பரிதாவி ஸம்வத்ஸரத்தில் (அதாவது 53 ஆண்டுகட்குமுன்பு) இந்த ஸ்வாமி திருவேங்கடமுடையானுத்ஸவம் ஸேவிக்கத் திருமலைக்கு எழுந்தருளியிருந்தார். அப்போது, (கீழே ப்ரஸ்தாவித்த) ஸ்ரீமத் திருமலை திருப்பதி அனந்தாண்பிள்ளை, புரிசை ஸ்ரீ ரங்காசாரியர் ஸ்வாமியும் அவ்விடம் எழுந்தருளியிருந்தார். அப்போது அந்த மஹாபுருஷர் இந்த ஸ்ரீ ஸுதர்சநாசார்யஸ்வாமியின் அப்ரதிம யோக்யதைகளிலே அதிமாத்ரம் ஈடுபட்டு வெகு நிர்ப்பந்தப்படுத்தி இவருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை ஸ்வீகரித்ததை அடியேன் ஸாக்ஷாத்கரித்தவன். ஸ்ரீமத் புரிசை ஸ்வாமியைக்காட்டிலும் இவர் இருபத்தைந்து திருநக்ஷத்ரம் சிறியவர். அப்படியிருந்தும் "ஸ்ரீ வைஷ்ணவத்வபூர்த்தி யுள்ளது இவரொருவர்க்கே" என்று அந்த ஸ்வாமி நன்கு கண்டறிந்து வெகு பலாத்கார மாகவே இவருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை ஸ்வீகரித்தருளினாரென்றால் இதைவிட அதிகமாக இந்த ஸ்வாமியின் பெருமையைப்பற்றி எடுத்துரைக்கவேண்டுமோ? ஸ்ரீகாஞ்சியில் அடியேனை வியாஜமாக்கிக்கொண்டு உலகம் புகழநின்ற வேதவேதாந்த வைஜயந்தி வித்யாசாலையை நிறுவிய மஹாநுபாவர் இவரேயாவர். இவர் தம்முடைய பொன்னடிக்கால் நலத்தினாலேயே காஞ்சியில் பலபலர் யோக்யதைகள் பெற்றார்கள். காஞ்சியில் அனேக திவ்யதேசங்களில் அவிச்சிந்நமாக வேதபாராயண கைங்கரியம் நடந்தேறும்படி பல வித்யார்த்திகளை க்ரமாந்த யஜுர்வேதத்தில் தேறினவர்களாம்படி அத்யயனம் செய்வித்தருளியவர் இந்த ஸ்வாமியே.

இவரே ஆழ்வார் திருநகரியிலும் இரண்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து அவ்விடத்திலும் வேதபாராயண கைங்கர்யம் நடைபெற்றுவர முயற்சி செய்தருளினார். அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கும்போது திருமேனியில் சிறிது ஆரோக்கியக் குறை யுண்டாகி ஸ்ரீ காஞ்சிக்கு மீண்டெழுந்தருளி தாது வருஷம் பங்குனி மாதத்தில் தம்முடைய திருமாளிகையில் திருநாட்டுக்கெழுந்தருளினார்.

இந்த ஸ்வாமி இடைவிடாது ஏற்றுக்கொண்டிருந்த வித்யாபரிச்ரமங்களைப் பார்க்கும்போது இவர் அமாநுஷர் என்றே அறுதியிடும்படியிருந்தது. *பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி யடிமை கொண்டாய்* என்று பாவியேனும் அநுஸந்தித்து ஸத்தை பெறும்படி அடியேனை ஒரு பதார்த்தமாக்கியருளின இம்மஹாசார்யர் திறத்தில் *எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கேநாமாட் செய்வோம்* என்கிற ஆசம்ஸையல்லது மற்றொன்றுமறியேன். ... ❁

## 7. ஸ்ரீமதுபயவே. குண்டலம். நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி

இத்திருநாமம் பூண்ட மஹாஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் உபயவேதாந்த வர்த்தினீ வித்யாசாலையை முன்னம் அபிவிருத்திக்குக் கொண்டுவந்த மஹாபுருஷர்களில் தலைவர். இவரிடத்தில் ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை அதிகரித்து நாளைக்கும் ஜகத்ப்ரஸித்த வித்வச் சிகாமணிகளாக விளங்கும் மஹான்கள் பலருளர். ஸ்ரீபெரும்பூதூரில் வித்வத் வரிஷ்டராய் விளங்கியவரும் மஹாவாக்மியுமான ஸ்ரீமத் உபயவே. தி. ஆஸுரி. ராமாநுஜாசார்யர் ஸ்வாமி, இந்த ஸ்ரீ நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமியின் அந்தேவாஸி என்ப

தோன்றே இவருடைய அப்ரதிம வைபவத்தை விளக்கவல்லதாகும். இவருடைய ஜன்மபூமி நைஜாம் இலாகாவில் சேர்ந்த 'இந்தூர்' என்னும் அக்ரஹாரம். வடதேசத்திலிருந்த ஸ்ரீ உ.வே. இல்லந்திர ராகவாசாரியர் ஸ்வாமி யென்பவரிடத்திலும், மற்றும் சில மஹாவித்வான்களிடத்திலும் இவர் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் வாசித்து, கத்தவால் வனபர்த்தி வேங்கடகிரி முதலான ஸம்ஸ்தானங்களில் பரீக்ஷை கொடுத்து வித்வான் என்னும் விருதும் ஸ்வர்ண குண்டலமும் பெற்றவர். அதுபற்றியே குண்டலம் ஸ்வாமி யென்றே இவர் வழங்கப்பட்டுவந்தார்.

இருபத்தைந்து திருநக்ஷத்திரத்திற்குள் சதுச்சாஸ்த்ர வித்வானுகி ஆங்காங்கு வாக்யார்த்தமும் சொல்லி ப்ரஸித்திபெற்று இவர் இருபத்தாருவது திருநக்ஷத்திரத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வந்து சேர்ந்து, அப்போது அவ்விடத்தில் பர்யாய பாஷ்யகாரராக விளங்கி வந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி எம்பார் ஜீயர்ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீ பாஷ்யாதிகளை அதிகரித்தார். அவ்விடத்திலேயே மஹா வ்யாபகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ உ.வே. ஆடூர் ரங்கஸாமி அய்யங்கார் ஸ்வாமி ஸந்நிதியிலே அருளிச்செயல்களை ஸாங்கமாக ஓதி பகவத் விஷயாதி க்ரந்தங்களை அதிகரித்தார். இப்படி முப்பத்தைந்து திருநக்ஷத்ரம் வரையில் அத்யாத்ம வித்யைகளை அதிகரித்துத் தலைக்கட்டியபின் அவ்வூர் ஸம்ஸ்க்ருத கலாசாலைக்கு ப்ரதம பண்டிதராகவும் அத்யக்ஷராகவும் இவர் வரிக்கப்பட்டார். அந்த வித்யாசாலையிலும், தனியாகத் திருமாளிகையிலும் இந்த ஸ்வாமி பக்கலில் ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசித்தும் ஸ்வரூபக்ரந்தங்களை அதிகரித்தும் உத்தீர்ணரானவர்கள் பலர்.

கி. பி. 1890 ஞூ முதல் 1912 ஞூ வரையில் (இருபத்திரண்டு ஸம்வத்ஸரம்) இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் அத்யக்ஷராக எழுந்தருளியிருந்து வித்யாதாநம் செய்தருளினர். ஐம்பத்தேழாவது திருநக்ஷத்திரத்தில், ஸ்ரீபெரும்பூதூரிலேயே திருநாட்டுக் கெழுந்தருளினர்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, அயோத்யா ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி இவர் ஸந்நிதியிலேயே ஸ்ரீ பாஷ்ய கீதாபாஷ்யங்கள் அதிகரித்தார். ஷை ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலைக்கு (இந்த ஸ்வாமிக்குப் பிறகு) அத்யக்ஷராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ உ.வே. வித்யாபூஷணம். காழியூர் ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமியும் இவர் பக்கலிலேயே வித்யாஸர்வஸ்வமும் அதிகரித்தார். மற்றும் பல திசைகளில் நின்றும் வந்திருந்து இவர் பக்கல் வித்யாக்ரஹணம் பண்ணி ப்ரஸித்த வித்வான்களாக விளங்கினர் பலருண்டு. இந்த யோக்யதைகளெல்லாம் ஒருபுறமிருக்க, *பயிலும் சுடரொளி* நெடுமாற்கடிமைகளின் ப்ரமேயத்தைப் பரிபூர்ணமாக அநுஷ்டித்துப் போந்தவர் இந்த ஸ்வாமியொருவரேயென்பது இவர்க்கு அஸாதாரணமான பெருமை. "தொடையொத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி" என்னுமாபோலே அனேக காலம் புஷ்பக் குடலையுடனேயே இவர் ஸேவை ஸாதிப்பது வழக்கம். ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டவளவிலேயே நெடுந் தூரத்திலிருந்தும் ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு உபசரிக்கும் பரிசு இவரொருவர்க்கே அஸாதாரணச் செல்வமாயிருந்தது.

இந்த ஸ்வாமி திருமுன்பே ஸ்ரீபெரும்பூதூரில் நடந்தவொரு விநோதமான இதிஹாஸத்தை விஜ்ஞாபித்துத் தலைக்கட்டுகிறேன். பாலவேடு ரங்கராமாநுஜாசாரியர்

என்கிறவொரு வடகலை வித்வான் விசேஷோத்ஸவகாலங்களில் ஸ்ரீபெரும்பூதூர்க்கு வருவர். குண்டலம் ஸ்வாமியிடத்தில் ஏதாவது குதர்க்கம் பேசுவர். ஒரு ஸமயம் அவர் குண்டலம் ஸ்வாமியை நோக்கி, "பாஷ்யகாரர் வாழி திருநாமத்தில் *அறுசமயச் செடியதனை அடியறுத்தான்வாழியே* என்றிருக்கிறது. அதற்கு விவரணமான மற்றொரு வாழி திருநாமத்தில் "சங்கர பாக்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள்மதம் சாய்வுற" என்றிருப்பதில் ஐந்து மதங்கள்தானேயிருக்கிறது; ஆறுவது மதம் சொல்லப்படவில்லையே, அது ஏன்? என்று கேட்கிறார். குண்டலம் ஸ்வாமி அதற்கு ஏதோ ஸமாதானம் ஸாதிக்கப்போகிறார். அப்போது அங்கிருந்த அடியேன் [15, 16 பிராயமுள்ளவன்] "ஸ்வாமிந்! சங்கரபாக்கரவென்கிற பாசுரத்தில் ஆறு மதங்களும் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறதே; ஐந்து என்று எப்படி ஸாதிக்கிறது; விரலைவிட்டு எண்ணிப் பாரும்" என்றேன். சங்கர, பாஸ்கர, யாதவ, பாட்ட, பிரபாகர = ஐந்துதானேயப்பா! என்கிறார் அவர். 'பிரபாகரர்' என்றபிறகு (தங்கள்மதம்) என்றிருக்கிறதே, அதைச் சேர்க்காமல் விடலாமோ? என்றேன். அது யாருடைய மதம்? என்கிறாரவர். 'தங்கள் மதந்தான்' என்கிறேனடியேன். அவர்க்கு விளங்கவில்லை. 'தங்கள் வீட்டில் எல்லாரும் ஸௌக்கியமா?' என்று கேட்டால் 'தங்கள்' என்பதற்கு 'உங்கள்' என்று அர்த்தமல்லவா? என்றேன். அப்படி இங்கு என்ன தெரிவிக்கப்படுகிறது? என்கிறாரவர். சங்கரபாஸ்கராதி மதங்களோடுகூட உங்கள் மதத்தையும் எம்பெருமானார் தொலைத்தாரென்று இந்த வாழி திருநாமம் தெரிவிக்கிறது — என்றேன். அவரோ ஒன்றும் தோன்றாது திகைத்து நிற்கிறார். குண்டலம் ஸ்வாமி உள்ளப் பூரித்து "இந்த பிள்ளை யார்? ஜீயர் ஸ்வாமி பேரனா?" என்று ஸாதித்துக்கொண்டே அடியேனை ஆரத்தழுவி "அப்படி சொல்லப்பா! இனிமேல் இவர் வம்பு வினாக்களைக் கொண்டுவரமாட்டார்" என்று கால்மணி காலம் ஏதேதோ ஸாதிக்கிறார். அன்று எங்கும் இதே பேச்சாக இருந்தது. குண்டலம் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஸாரநாதாசாரியரென்று ஒருவர் இருந்தார். அவர் மஹாமேதாவி. இளமையிலேயே நியாயவேதாந்த வித்யாநிதியென்று பெயர் படைத்தார். அவர் மண்ணுலகின் தௌர்ப் பாக்யத்தினால் இளமையிலேயே பரமபதித்தார். அவர் அப்போது உடனிருந்ததனால் அடியேனுக்கு 'தங்கள் மதம்' என்று பெயரிட்டாரவர்.

குண்டலம் ஸ்வாமியை ஸேவித்தவர்கள் இப்போது பலர் இருந்தாலும் அவரிடத்தில் வித்யாக்ரஹணம் பண்ணினவர்கள் ஒருவருமில்லையென்றே சொல்ல வேண்டியிருக்கிறது. ஆந்திர தேசத்தில் அவதரித்த அந்த ஸ்வாமி தமிழ் நாட்டினர்க்கும் மேலாக பகவத்விஷய நிர்வாஹம் செய்துகொண்டிருந்தது மிக வியக்கத்தக்கதாயிருந்தது.

## 8. ஸ்ரீமதுபயவே. பண்டிதரத்னம். கஸ்தூரி. ரங்காசார்ய ஸ்வாமி (மைஸூர்.)

மைஸூர் மஹாநகரத்தில் பண்டிதரத்னம் கஸ்தூரி ஸ்வாமியென்றே வழங்கப்படும் வித்வான் ஜகத்ப்ரஸித்தர். அந்த ஸ்வாமி சதுச்சாஸ்த்ர வித்வானென்றும், விசேஷித்து நியாயமீமாம்ஸைகளில் ப்ரசண்டபண்டிதரென்றும் சொல்லுவர்கள். சிறந்த க்ராந்திகர் என்பதை அடியேன் நன்கறிந்திருக்கிறேன். அந்த ஸ்வாமியிடத்தில்

சாஸ்த்ரங்கள் வாசித்து உத்தீர்ணர்களான வித்வான்கள் பலர். சென்ற ஸம்வத்ஸரத்தில் பரமபதித்த ஸ்ரீமத் பரகால ஸ்வாமி [அபிநவரங்கநாத பரகால மஹா ஸ்வாமி] கஸ்தூரி ஸ்வாமியின் அந்தேவாஸியென்று ப்ரஸித்தர். இதை ஸ்ரீஸ்வாமி தாமே அடியேனிடத்தில் ஸாதித்துமிருந்தார். இப்போது பரகாலமடாஸ்தானத்தை அலங்கரித்திருக்கின்ற ஸ்வாமி கஸ்தூரி ஸ்வாமியின் திருக்குமாரரேயாவர். இவரையும் கஸ்தூரி ஸ்வாமியென்றே வழங்கி வருகிறார்கள். பண்டிதரத்னம் கஸ்தூரி ஸ்வாமியை அடியேன் ஒருதரமே ஸேவிக்க நேர்ந்திருக்கிறது. அந்த வரலாற்றைச் சுருங்க விஜ்ஞாபிக்கிறேனிங்கு.

அடியேனுடைய பன்னிரண்டாவது பிராயத்தில் ஸ்ரீமத் கஸ்தூரி ஸ்வாமி திருமலை யாத்திரையாக வெழுந்தருளினவர் காஞ்சீபுரிக்கும் விஜயம் செய்திருந்தார். அவரோடுகூட மைஸூர் அரசாங்கத்து அதிகாரிகளும் சிலர் வந்திருந்தார்கள். தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்துவரும் சடகோபநிலய பாடசாலையின் சார்பில் அவர்கள் தங்கியிருந்து அந்த பாடசாலையில் ஒருநாள் பரீக்ஷாஸதஸ்ஸு நடத்தினார்கள். அப்பாடசாலையில் வாசிக்கிற வித்யார்த்திகளை மட்டுமல்லாமல் பிறவிடங்களில் வாசிக்கிற (ஸம்ஸ்க்ருத) வித்யார்த்திகளையும் வருவித்துப் பரீக்ஷை நடத்தினார்கள். அதற்கு அடியேனும் போயிருந்தேன். உத்துங்கவித்யார்த்திகளைத் தனியாகவும் கீழ்வகுப்பு வித்யார்த்திகளைத் தனியாகவும் உட்காரவைத்துப் பரீக்ஷை நடத்தி வருகிறார்கள். முராரி நாடகத்தில் பரீக்ஷை நடந்து கொண்டிருக்கிறது. அதில் முதல் அங்கத்தின் முடிவிலுள்ள "யதிந்தோரங்வேதி வ்யஸநமுதயம் வா நிதிரபாம்" என்கிற சுலோகத்தில் ஓர் உத்தம வித்யார்த்தி பரீக்ஷை செய்யப்படுகிறார்; அவர்க்கு ச்லோகமே உபஸ்திதியில்லை. அதனால் அவர் மிகவும் சிரமப்படுகிறார். அப்போது சிறுமாணுக்கர்திரளில் உட்கார்ந்திருந்த யான் "அதை நான் சொல்லுகிறேன்" என்றேன் அப்பாடசாலையின் தலைமையுபாத்யாயரான சாமா. திருமலை தாதாசாரியர், அடியேன் ஏதோ வம்பு பேசுவதாக நினைத்து "கழுதே! வாயைமூடியிரு" என்று அதட்டினார். பரீக்ஷகரான கஸ்தூரி ஸ்வாமி "சொல்லப்பா! பார்ப்போம்" என்றார். உடனேயெழுந்து அந்த ச்லோகத்தைப் பூர்த்தியாகச் சொல்லி அர்த்தமும் தாத்பரியமும் விரியச்சொல்லி அதில் இரண்டாவது பாதத்தில் "ஜயதி ஜநிகர்த்து: ப்ரக்ருதிதா" என்ற விடத்திற்குச் சொல்லவேண்டிய "ஜநிகர்த்து: ப்ரக்ருதி:" என்னும் வியாகரண ஸூத்ரத்தின் விஷயங்களையும் சொல்லி முடித்தேன். அப்போது அடியேனுக்கு வயது பன்னிரண்டாதலால் அந்த நிலைமையில் யான் முராரி நாடக ச்லோகத்தைச் சொன்னதும், அதன் பொருளை உபந்யாஸ வகையில் உரைத்ததும் அவர்களுக்கு மிக மிக வியப்பாக இருந்தது. "காவ்ய பாடம் வாசிக்கிற உனக்கு இந்த ச்லோகம் எப்படித் தெரிந்தது?" என்று கஸ்தூரி ஸ்வாமி கேட்டார். என் க்ருஹத்தில் எனது தகப்பனாரிடத்தில் பலபேர்கள் வாசிக்கிறார்கள்; அவர்களில் முராரி நாடகம் வாசிப்பவர்களுமுண்டு; அவர்கள் வாசிக்கும்போது நான் கூடவிருந்து கேட்டுக் கொண்டிருப்பது வழக்கம்; அதனால் தெரிந்தது" என்றேன். "அவரவர்கள் வாசிக்கிற எல்லா க்ரந்தங்களிலும் நீ பரீக்ஷை சொல்லுவாயா?" என்று கேட்டார்; "நிச்சயமாகச் சொல்ல முடியாது; அனேகமாய்ச் சொல்லுவேன்; கேட்டுப் பார்க்கலாமே" என்றேன். பிறகு மற்ற வித்யார்த்திகளை விட்டுவிட்டு என்னை மாத்திரம் விசேஷமாகப் பரீக்ஷித்தார்கள். அவர்கள் த்ருப்தியடையும்படியாகவே சொல்ல இயன்றது.

பிறகு பரீக்ஷிதர்களுக்கு ஸன்மானம் செய்யும்போது, ஒரு ரூ. இரண்டு ரூ. மூன்று ரூ. உத்தரீயம், புத்தகம்...இப்படியாகக் கொடுத்தார்கள். அடியேனுக்கு இரண்டு பவுன் கொண்ட டாலர் ஒன்று கொடுத்தார்கள். அதைக்கொண்டு தாய் தந்தையர் எனக்குத் தங்கவளை செய்வித்துக் கரபூஷணம் போட்டார்கள். அதை யான் 26, 27 வயது வரையில் அணிந்துகொண்டிருந்தேன். அதனால் "தங்கக் காப்பு அண்ணு" என்றே எனக்குப் பெயர் வழங்கி வந்ததப்போது. காவ்ய நாடக அலங்கார க்ரந்தங்களை மேல் வகுப்பினர்கள் வாசிக்கும்போது உடனிருந்து கேட்டது, பிறகு அந்த க்ரந்தங்களை யெல்லாம் தனியாகவும் வாசித்தது ஆகிய விவற்றால் அடியேனுக்கு காவ்ய-சம்பூ-நாடக அலங்கார க்ரந்தங்களின் உபஸ்திதி அதிகமாகவுண்டாயிற்று. இடையில் பலவருஷங்கள் அவற்றை ஸ்மரிக்க ப்ரஸக்தியில்லாமலிருந்துங்கூட இற்றைக்கும் அவற்றின் உபஸ்திதியைப் பெரும்பாலுமுடையேன். இவ்விஷயத்தில் அடியேன் மூவரிடத்தில் தினந்தோறும் உபகாரஸ்ம்ருதி செலுத்திக்கொண்டிருக்கிறேன்; 1. திருத்தகப்பனுர்: 2. (மாத்வ) ராமசந்த்ராசார்; 3. அவருடைய ஸஹோதரர் வித்யாசார் ஆகிய இம் மூவரும் என்னுடைய நித்ய க்ருதஜ்ஞதா பாத்ரபூதர்கள். ... ... ❁

## 9 ஸ்ரீமதுபயவே. காஞ்சீ. திருப்புட்குழி பட்டண்ணுஸ்வாமி

ஸ்ரீகாஞ்சீ ஸன்னிதிவீதியில் ஜகத்ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீக்ருஷ்ண தாதாசார்ய ஸ்வாமியென்கிற திருப்புட்குழி யப்பாஸ்வாமியை அடியேன் அறியேன். அவர் பரமபதித்தகாலத்தில் அடியேன் ஒருவயது சிசுவாக இருந்தவன். அவருடைய திருக்குமாரர் பட்டண்ணுதாதாசாரியர்ஸ்வாமி யென்பவரை நன்கறிவேன். முப்பது ப்ராயம் வரையில் அவரை ஸேவித்திருக்கிறேன். 'தீபாதுத்பந்நப்ரதீபம்' என்னுமாபோலே திருத்தகப்பனுரைக் காட்டிலும் மஹா மேதாவியென்று சொல்லுவர்கள். நியாய வேதாந்தங்களிரண்டிலும் அத்விதீய வித்வந்மணியாக விளங்கினவர். ஸ்ரீகாதிஸ்வாமி வெளியூர்களுக்கு எழுந்தருளுங்காலங்களில் அடியேனுக்கு நியாயோபாத்யாயராக அமைந்திருந்த ஸ்ரீமதுபயவே. இளங்காடு ரங்கஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி இந்த பட்டண்ணுஸ்வாமியிடத்திலேயே ஸகலமும் அதிகரித்தவராகையாலே ஸ்வாசார்யருடைய மேதாப்ரதிபா ப்ரஜ்ஞா விலாஸங்களை அடிக்கடி அவர் சொல்லக் கேட்டிருக்கிறேன். கீழே ப்ரஸ்தாவித்த கஸ்தூரி ரங்காசார்ய ஸ்வாமியின் பாண்டித்ய ப்ரஸித்தி அக்காலத்தில் மிக்கிருந்தபடியால் அவரோடே வாதப்பண்ணி வெற்றிபெற வேணுமென்கிற ஆசை இந்த பட்டண்ணு ஸ்வாமிக்கு உண்டாகி மைஸூருக்குப் புறப்பட்டாராம். ரைல்வண்டி ஸ்ரீரங்கபட்டணம் ஸ்டேஷனில் நிற்கும்போது, ஏதோ கார்யார்த்தமாக அவ்விடம் வந்திருந்த கஸ்தூரிஸ்வாமி அந்த வண்டியில் மைஸூர்போக ஏறினுராம். பட்டண்ணுஸ்வாமி வீற்றிருந்த வண்டியிலேயே ஏறினுராம். இருவர்க்கும் பரிசயம் அடியோடு இல்லாததனால் ஒருவரை யொருவர் அறிந்துகொள்ள முடியவில்லை. ஸாமாநாதிகரண்யமிருந்தும் பரஸ்பரம் பேச்சு நிகழவில்லை. பட்டண்ணுஸ்வாமியை நன்கறிந்த வேறொரு மைஸூர்ஸ்வாமி அந்த வண்டியிலேறினவர் இவரை நமஸ்கரித்துக் குசலப்ரச்நம்பண்ணி 'என்ன விசேஷம்? எங்கே யெழுந்தருளுகிறபடி?' என்று கேட்க, அதற்குப் பட்டண்ணுஸ்வாமி 'மைஸூரில் கஸ்தூரியோ கோரோசனமோ ஒருவர் இருக்கிருராமே, அவருடைய மூக்கையுடைக்க வந்துகொண்டிருக்கிறேன்' என்றுராம். அங்கே பக்கத்திலேயேயிருந்த கஸ்தூரிஸ்வாமி இதைக் கேட்டு இவரை நோக்கி "தேவரீர்தான் பட்டண்ணுஸ்வாமியோ? அடியேன்தான் கஸ்தூரிகோரோசனம்; இங்கேயே மூக்கையுடைக்கலாமே" என்று ப்ரணயபூர்வகமாக

ஸாதித்தாராம். அடுத்த க்ஷணத்திலேயே வாக்யார்த்தமாரம்பித்தாய்விட்டதாம். மைஸூர் ஸ்டேஷனில் இறங்கியும் முடிவுபெறுமல் வெகு நாழிகை நடந்துகொண்டிருந்ததாம். முடிவில் பரஸ்பரம் பரமப்ரேமமுண்டாகி கஸ்தூரிஸ்வாமியும் தமது திருமாளிகைக்கே இவரை யெழுந்தருளச்செய்து ஸத்வாரக அத்வாரக ஸத்காரங்களைப் பெறுவித்தாரென்று ப்ரஸித்தம். ... ... ... ❁

## 10. ஸ்ரீமதுபயவே. தன்றி. பட்டப்பாதாதாசார்ய ஸ்வாமி.

ஸ்ரீ காஞ்சீ ஸன்னிதி வீதியில் பதினாறுகால் மண்டபத்திற்கெதிர்த்திருமாளிகையில், தண்ட்ரி. ஸ்ரீநிவாஸதாதாசார்ய ஸ்வாமியென்று திருநாமமுடையராய் பட்டப்பாஸ்வாமியென்றே வழங்குப்பட்டு வந்தவர் இந்த மஹா புருஷர். இவர் அடியேனுடைய திருத்தகப்பனார்க்கு ஸஹாத்யாயியாய் *பஹி: ப்ராண இவாபர:* என்னும்படியிருந்தவரென்று திருத்தகப்பனாரே ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அடியேனுடைய பதினைந்து பிராயத்திற்குள்ளாகவே இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து விட்டார். அப்போது இவர்க்கு நாற்பத்தைந்து திருநக்ஷத்ரங்கூட நிரம்பவில்லையென்று ஞாபகம். அடியேன் பாடசாலைக்குப்போகிறபோதும் திரும்புகிறபோதும் இந்த ஸ்வாமியிடத்தில் சற்றுப் போதாவது வார்த்தையாடாமலிருப்பதில்லை. இது திருத்தகப்பனாருடைய நியமனத்தினுலுமாயிற்று. திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் வித்யார்த்திகளில் இவர் தலைவராயிருந்து, சதுச்சாஸ்த்ரங்களிலும் துல்யமான பாண்டித்யம் பெற்றிருந்தார். ஸ்ரீமதுபயவே. திருக்கோட்டியூர். ஸௌம்ய நாராயணுசார்ய ஸ்வாமி (கோஷ்டீபுரம் ஸ்வாமி) இவரிடத்தில் பூர்வமீமாம்ஸை வாசிக்க வந்து சேர்ந்து வாசிக்கத் தொடங்கின சில மாதங்களுக்குள்ளேயே இவர் பரமபதித்ததாகச் சொல்லுவர்கள். பட்டப்பாஸ்வாமியின் ஸம்ஸ்க்ருதரசநாசாதுர்யம் நிகரற்றது. நியாயஸித்தாஞ்ஜநத்தை இரண்டு வியாக்கியானங்களோடு க்ரந்தலிபியில் காஞ்சியிலேயே அச்சிட்டது விச்வவிதிதம். அந்த ஸ்ரீகோசத்தில் விஸ்த்ருதமான பூமிகை காண்பதுண்டே, அது பட்டப்பாஸ்வாமியினுடையதே. அதைக் காணும் ஸகல வித்வான்களும் ‘இப்படிப்பட்டவொரு வாங்மயம் எங்குங்கண்டதில்லையே’யென்று விஸ்மயஸ்திமிதராவர்கள். உண்மையில் அது நிகரற்ற ரசநாவிசேஷமென்பதில் ஸந்தேஹமில்லை.

ஸுபாஷிதநீவிக்கு [சில பத்ததிகளுக்கு] இந்த ஸ்வாமி ஸாதித்த வியாக்கியானம் உத்யாநபத்ரிகையில் கண்டம் கண்டமாக அச்சிட்டு வெளிவந்திருக்கின்றது. அதில் அச்சுப்பிழைகள் இருந்தாலும் வியாக்கியானசைலி அத்புதம் அத்புதம் என்றே கொண்டாடத்தக்கது. பண்டிதவுலகமெல்லாம் கொண்டாடி வருகிறது. ஒவ்வொரு சுலோகத்திற்கும் பத்தெட்டு அர்த்தங்கள் விவரித்திருப்பது மிகப் பொருத்தமானது.

இந்த ஸ்வாமிக்கு ஒரு திருக்குமாரர் இருந்தார். அவர் வேதாத்யயனம் செய்தவர். தேவப்பெருமாள் ஸன்னிதியில் சிலவாண்டுகள் தர்மகர்த்தாவாகவுமிருந்தார். அவர்க்கு ஸந்ததியில்லை. பட்டப்பாஸ்வாமிக்கு தௌஹித்ரர்கள் விளங்கி வருகிறார்கள். அவர்களுள் ஸ்ரீமான் M. S. வரதாசாரியென்பவர் மஹாவிவேகி. சிறந்த உத்யோகபதவியில் வாழ்பவர். ஸ்வரூபக்ரந்த காலக்ஷேபங்களில் ஈடுபட்டவர். வாழ்க வாழ்க நீடூழி வாழ்க. ... (10)

[தொடரும்]

**மிக முக்கியமான அறிவிப்பு:**—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் மூலமாக ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பது உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

366. Sri Vangeepuram Raghavacharya,
MELKOTE (Mysore State)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.